உ

‘…ன்பு வெளியீடு’

அலர்—6.

# திருப்புடைமருதூர் தலச்சிறப்பு




ஆசிரியர் :—

திரு. நா. பிச்சுமணி

தமிழாசான்.



…க் கழக உயர்தரக் கல்லூரி

…, பொம்பாய்.

உ

ஓம் ஸ்ரீ முருகா.

ஸ்ரீ கோமதி புடார்ஜுனேசுவரர் ஸஹாயம்.

---

‘அன்பு வெளியீடு’

அலர்—6.

# திருப்புடைமருதூர் தலச்சிறப்பு

ஆசிரியர் :—

திரு. நா. பிச்சுமணி

தமிழாசான்.

தென்னிந்திய கல்விக் கழக உயர்தரக் கல்லூரி

மாதுங்கா, பொம்பாய்.

(South Indian Education Society's High School,

MATUNGA, BOMBAY-19.)

# பாராட்டுரை - 1.

---

ஆசிரியர் திரு. நா. பிச்சுமணி அய்யர் அவர்களது மொழிப் பற்றும், தமிழ்த் தொண்டும் அளப்பரியது. பதினைந்து வருடங்களுக்கு மேலாக பம்பாய் நகரத்தில் தமிழாசிரியர் பதவி வகித்துத் தமிழ்ப் பணி ஆற்றி வரும் பேற்றோடு, 'வட நாட்டில் தமிழ் வளர்த்து வரும் பம்பாய் தமிழ்ச் சங்கத்தின் ஆரம்ப ஸ்தாபகர்களில் ஒருவர்' என்று சொல்லிப் பெருமைப் பட்டுக்கொள்ள ஆசிரியர்க்கு உரிமை யுள்ளது.

தமிழபிமானமும், சமயப்பற்றும் தூண்டப் பெற்ற பண்டிதர் அவர்கள், தங்கள் சொந்த ஊராகிய திருப்புடை மருதூர் ஸ்தல புராணத்தை 'ஆசை பற்றி' எழுத முன் வந்திருப்பது நல்ல முயற்சி. தமிழின் மூலம் தெய்வ பக்தியையும், சமயத்தின் மூலம் தமிழையும் வளர்த்தவர்கள் நமது நாயன்மார்கள், ஆழ்வார்கள் முதலியோர். அவர்கள் அடிச் சுவற்றைப் பின்பற்றி ஆசிரியரும் நயமான தமிழ்ப் பாக்களால் பாடி யிருக்கும் 'புடைமருதூர்' அகவலைப் படிப்பவர்கள் பண்டிதரின் உளப்பண்பாட்டையும், தமிழ் நலத்தையும் ஒருங்கே காண்பார்கள் என்பது உறுதி. 'பரிந்தருளால் பரமனையே' பாடியுள்ள 'அறிவு நெறி, மருவு மருங்கவிகள்' தொகுதியான இந்நூலை, தமிழார்வமுள்ளோர்களும் ஆஸ்திகர்களும் விரும்பிப் படிப்பார்கள் என்பதில் ஐயமில்லை.

மாதுங்கா
20—3—1951

பம்பாய்த் தமிழ்ச் சங்கத்தார்.

# பாராட்டுரை - 2.

---

பொம்பாய் மாதுங்கா தென் இந்தியக் கல்விக் கழக உயர்தரக் கல்லூரி மாஜித் தலைவர், பொம்பாய்த் தமிழ்ச் சங்க மாஜித் தலைவர், பொம்பாய் தர்மப்ரகாச ஸ்ரீநிவாசய்யா உயர்தரப் பள்ளியின் தலைவர் ஸ்ரீமான் எஸ். ஸ்ரீநிவாஸய்யர் B.A., L.T., அவர்கள் முன்னுரை :—

பழம் பெருநாடாகிய நம் பாரத நாடு பேரொண்மை குன்றாது நிகழ்ந்து வருவது நாட்டு மக்களின் தெய்வப் பற்றினாலேயே என்று சாற்றுவது சாலவும் பொருத்த முடைத்தே. மாந்தர் நெஞ்சில் அறப்பற்றையும், கடவுள் பக்தியையும் ஊற்றுவது நம் நாட்டில், மிளிர்ந்திலங்கும் பல் பேர் புராணங்களேயாகும். புராணங்களை வெறும் புனைந்துரைகள் என்று கூறுவாருமுளர். உற்று நோக்கின் அக்கூற்று தவறானது எனலாம். புராணங்கள் 'நெறி காட்டுபவை, நேர்மை பயப்பவை' மட்டுமல்ல, பல சரித்திர நிகழ்ச்சிகளும், சாஸ்திரீய உண்மைகளும், விஞ்ஞானக் கருத்துக்களும், பூகோள வர்ணனைகளும், மக்கள் வாழ்க்கை இயல்புகளும், பழம் புராணங்களில் அளவிறந்து புதைந்து கிடக்கின்றன. ஆப்பிரிக்காக் கண்டத்தில் பாயும் நீல நதியின் உற்பத்தி ஸ்தானத்தை மேனாட்டு பூகோள அன்வேஷகர்கள் இந்தியப் புராண மொன்றில் விவரிக்கப்பட்ட குறிப்புகளைக் கொண்டே ஆய்ந்தறிந்தார்களென்றால், புராணங்கள் 'அறிவுக் களஞ்சியங்கள்' என்று கூறுமலே போதருமல்லவா ?

இனி அப்புராணங்கள் பல தொன்மையானவை. ஈண்டு யான் ஆய்ந்து விதந்து ஓதன் மேவிய புராணமோ, பொம்பாய்த் தமிழரிடையே, தமிழ் அணங்கைப் பிரதிட்டை செய்து, தேன் மொழியெனும் தென்மொழியின் அமுதச் சுவையை அவர்கள் பருகச் செய்ய அரும்பாடு பட்ட சிலருள் முதன்மையானவரும், பல் செய்யுள் நூல்களை யாத்தவரும், பல்லாண்டுகளாக பம்பாயில் கல்வித்துறையில் தொண்டு ஆற்றி வருபவரும், சிறந்த தமிழ் வாக்கு எழுத்தாளரும் ஆகிய ஆசிரியர் திரு. நா. பிச்சுமணி அய்யர் இயற்றியுள்ள 'திருப்புடை மருதூர் தலச்சிறப்பு என்னும் புராணமே யாகும். இஃதின் அவசியம் யாதாம் என ஒரு வினா

நிகழலாம். நாட்டின் அடிப்படையாகிய தெய்வப்பற்று, சற்றே மழுங்கி யிருக்கும் இந்நாளில் மக்களைத் தட்டி எழுப்பி, தெய்வ பக்தியில் ஈடுபடும்படி செய்தல் நாட்டின் நலனை விரும்பும் ஒவ்வொருவரும் இயற்ற வேண்டிய பணியாகும். இவ்வுயரிய நோக்கத்துடனே நமது ஆசிரியர் இந்நூலை அமைத்துள்ளார். அன்னார் தமது பிறப்பிடமாகிய 'ஆர்கலி சூழ்தரு அவனியின் கண்ணாய்' அமைந்த மூதூர் திருப்புடை மருதூரில் எழுந்தருளியிருக்கும் நாறும் பூநாதரின் மகிமையை மக்களுக்கு எடுத்துக் காட்டியிருக்கிறார். அதில், குறுமுனி தென்திசையடைந்து தமிழ் வளர்த்த காதையும், அகல்யை சாபமுற்ற வரலாறும், இந்திரன் அரனைப் போற்றலும், தாமிரவருணி ஆற்றின் பெருமையும், பக்திமேலிட்ட பண்டாரத்தின் சரிதையும், அன்னை கோமதியின் மகிமையும், மக்களின் நன்மைக்காக எல்லாரும் எளிதில உணர்ந்து தெரியுமாறு அகவற்பாவில் எழுதியுள்ளார்.

தென்னாட்டு மடங்களைப் பற்றிப் பல் வேறு அபிப்பிராயங்கள் மேவி வரும் இந்நாளில், மடங்கள் 'சைவமோங்கவும், செழுங்கலையோங்கவும், புனிதமோங்கவும், மெய்ந் நெறி வளர்க்கவும்' திகழ்ந்து விளங்தபவை என்று ஆசிரியர் நவிலுகின்றார். சைவ புராணம், ஸ்காந்த புராணம் முதலிய பல் வேறு புராணங்களில் பொதிந்து கிடக்கும் 'காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கச்' செய்யும் கதைக் கூற்றுக்களையும், உண்மைப்பொருள்களையும், ஆசிரியர் தமது நூலில், ஓரடி, ஈரடியில் 'சுருங்கச் சொல்லி, விளங்க வைத்'திருக்கிறார். பல அரிய வர்ணனைகளும், வித்தாரங்களும் இயங்கு படக் காட்சி போல, பயிலுவோர் அகக்கண் முன் இனிய கனிவுறு காட்சியளிக்கின்றன. ஆங்காங்கு பரவியுள்ள உயரிய நோக்கங்களும், கருத்துக்களும் நுகர்வோர் கருத்தை ஒரு நிலைப் படுத்துமென்பதற்கையமில்லை. நடையோ செவ்வியதாயும், உயரியதாயும் இருப்பதுடன் எளிமை, இனிமை, ஆழ்கருத்துடைமை மூன்றும் அமைந்துள்ளது. அகலிகையைக் கற்பழிக்கப் போகும் இந்திரனை, தேவேந்திரனெனத் திகழும் 'போகன்' என அழைக்கிறார். உண்மையில் நவீன நாகரீகத்திற்கேற்ப 'மைக் கருக் கொண்டு மந்திர ஜாலமாப் பெருவித்தை பயில்வோ ரன்ன' என்று எடுத்துக்காட்டுகிறார். இந்நூலில் சொல் நயம், பொருள் நயங்களைப்பற்றி ஆராய்ச்சி எழுதுவதென்றால் மிக நீளுமென அஞ்சி, இத்துடன் நிற்கிறேன்.

மக்களின் நலத்திற்காகப் பலதுறைகளில் எழுத்துப் பணி ஆற்றிவரும் நமது ஆசிரியருக்கு எல்லாவித நன்மைகளும் உண்டாக வேண்டுமென்றும், இந்நூலைப் படிப்பவர் எல்லோரும் ஆண்டவன் அருளைப் பெறவேண்டுமென்றும், நமது நாடு மேலும் மேலும் புகழுடன் ஓங்கிவளரப் பாடு படுவதற்கு இந்நூல் வழி காட்டியாக இருக்கவேண்டுமென்றும், கோமதி சமேத புடார்ஜுனேசுவரரை நான் பன் முறை இறைஞ்சுகின்றேன்.

ஜாவர் விஹார்
பிராமன்வாடா ரோட்
மாதுங்கா
பொம்பாய்

எஸ். ஸ்ரீனிவாஸசய்யர்,

24—3—50.

# பாராட்டுரை-3.

---

புண்ணிய பூமியான இந்தப் பாரதநாட்டின் தென்பாகத்தில் பல புண்ணிய க்ஷேத்திரங்கள் அமைந்துள்ளன. அவை ஒவ்வொன்றும் ஒவ்வொரு விசேஷத்தோடு கூடியவை. இவற்றுள் இந்திரன் சாபவிமோசனமடைந்த விடங்கள் மூன்றுகும். அவை ஆந்திர நாட்டிலுள்ள மல்லிகார்ச்சுனம், சோழ நாட்டின் காவிரியாற்றின் கரையிலுள்ள மத்தியார்ச்சுனம் என்ற திருவிடை மருதூர், திருநெல்வேலி ஜில்லாவில் தாம்பிரபாணி நதிக்கரையில் அமைந்துள்ள திருப்புடை மருதூர் ஆகியவை யாகும்,

இவற்றுள் முதலிரண்டு க்ஷேத்திரங்களுக்கும் வடமொழியிலும், தென் மொழியிலும், ஸ்தல புராணங்கள் ஏற்பட்டுள்ளன. ஆனல் திருப்புடை மருதூரைப் பற்றி விரிவான ஸ்தல புராணம் ஒன்றும் இருப்பதாகத் தெரியவில்லை.

இக்குறையை நீக்க ஸ்ரீமான் திரு. நா. பிச்சுமணி அய்யர் முன் வந்துள்ளார். இவர் எழுதியுள்ள திருப்புடை மருதூர் தலச் சிறப்பு" என்னும் இந்நூல் அகவற் பாவால் ஆனது. இதில் சொல் நயம், பொருள் நயம், சமயப் பற்று, நாட்டுப் பற்று முதலிய விஷயங்கள் மலிந்து கிடக்கின்றன.

இவ்வாசிரியர் இவ்விதம் சமயம், நீதி மார்க்கம் இவற்றைப் புகட்டும்படி பல நூல்கள் இயற்றும்படி மேலும் மேலும் ஊக்கமளிக்குமாறு எல்லாம் வல்ல இறைவனை வேண்டுகின்றேன்.

இங்ஙனம்

Matunga
30—12—1948

மு. கிருஷ்ண மூர்த்தி,
First Assistant,
S. I. E. S. High School

ஓம். ஸ்ரீ. முருகா.

## ஸ்ரீ கோமதி புடார்ஜுனேசுவரர் ஸஹாயம்

# ‘திருப்புடை மருதூர் தலச்சிறப்பு’

## பீடிகை.

---

பாரத பூமியின் தென் கோடியில் திருநெல்வேலி ஜில்லாவில் அம்பா சமுத்திரம் தாலூகாவில் உள்ள வெகு தொன்மையான சிறு கிராமம்; தாமிரவர்ணி நதியும் கருணை நதியும் (கடனா என்றும் சொல்வர்) கலக்குமிடத்தில் உள்ளது; பரிசுத்தமான, ஸ்படிகாகாரமான, மருந்து ஸத்தமைந்த நீரையேந்திய, அதிரகஸ்ய உற்பத்திஸ்தானத்தையுடைய, அகஸ்திய மஹரிஷியால் அனுக்கிரஹிக்கப் பெற்ற, புண்ணிய நதிகளில் ஒன்றான தாமிரவர்ணி நதியின் வலக் கரையில் உள்ளது ; நிருப்புடை மருதூர் என்னும்பெயர் வாய்ந்தது; ஸௌத் இந்தியன் ரயில்வேயில் வீரவ நல்லூர் ஸ்டேஷனிலிருந்தாவது, கல்லிடைக்குறிச்சி ஸ்டேஷனிலிருந்தாவது அம்பாமுத்திரம் ஸ்டேஷனிலிருந்தாவது மூன்று மைல் தூரத்திலுள்ளது ; பலநூற்றாண்டுகளாக எளியேன் பாம்பரையினர் வாழ்ந்துவருவது ; நாற்குலமும் நான்மறையும் பல தொழிலும் இன்றைக்கும் ஒற்றுமையும் அன்பும் நிலவி வாழ்ந்து வருவது ; கோமதி அம்பாளும், ஸாக்ஷாத் ஸர்வேசன், பரமேசுவராகிய ‘நாறும் பூநாதர்’ என்று தமிழ் பாஷையில் திருநாமமும், ‘புடார்ஜுனேசுவரர்’ என்று ஆரிய பாஷையில் திருநாமமும் வழங்கப்பெற்ற அதி தேவர்களின் ஆக்ஷிக்கும் பரிபாலனத்துக்கும் உட்பட்டது ; இத்தகைய திவ்ய சிவக்ஷேத்திரம் இப்புண்ய பூமியில், தலம், தீர்த்தம், மூர்த்தி, என்னும் மூன்றுவகையால் பெரும் பேறு பெற்ற புனித சிவக்ஷேத்ரங்கள் பலவில் மிகச்சிறந்ததான ஒன்று ; தக்ஷிணகைலாஸம் என்றும் தக்ஷிணகாசி, தக்ஷிணகங்கை என்றும் மஹாஸங்கல்பத்தில் கூறப்படுகிறது ; தாமிரவர்ணி நதி, முதலில் உத்தரவாஹினியாகவும், பின்னர் பூர்வ வாஹினியாய், முடிவில் தக்ஷிணவாஹினியாய், இங்ஙனம் மூன்று பக்கங்களிலும் தூய்மையான தாமிரவர்ணிநதியால் ஹாரம்போல் சுற்றப்பெற்றது; எழில் மிக்க நான்கு ரதவீதிகளும், ஸன்னதி வீதியும், இன்னும்

பலசிறு வீதிகளும், பூங்காக்களும், நான்கு மூலை விநாயகர் கோயில் களும், திரு ஆடுதுறை முதலிய பல மடாதிபதிகளின் நிலையங் களும், பலதர்மசத்திரங்களும், படித்துறைகளும், ஒன்பது படிக்கட் டும், மேட்டிடை ஆலயமும், தலத்தின் சிறப்புக்குச் சான்ருக உள்ள அகத்தியர் துறையும் பீடமும், மருதடி ஸ்வயம்புலிங்கமும், காண்போர் மனதைக் கவர்ந்து உணர்ச்சியும் நம்பிக்கையும் பக்தி யும் ஊட்ட வல்லன ;

இத்துணைச் சிறப்புக்களெல்லாம் இப்போதும் சற்று சிதைந்த நிலையிலாவது காணல் ஆகும். ஏனெனில், தொழில் நிமித்தமாகவும், உத்தியோகம், வாணிபம் முதலான பல் நிமித்தமாகவும் கிராமங் களை நீத்தவர் பட்டண அல்லது பட்டினவாசிகளாகவே தலைப்பட்டு விட்டதனுல் பல்லாண்டுகளாக, கிராம களின் சிறப்பும், வளமை யும், தொன்மையும், கலைகளும் இனையன பலவும் நிராகரிக்கப்பட்டு விட்டன. தன் உயர்ந்த கொள்கைகள் பலவற்றுள் 'கிராம புனருத்தாரணம்' ஒன்று மிகச்சிறந்ததாகும் என்று கூறிக் கொண்டிருந்தார் நம்தேசபிதாவாகிய மஹாத்மா காந்தி அடிகள். அவரைப் பின்பற்றி நம் மத்ய சர்க்கார்களும் மாகாண ஸர்க் கார்களும் அரிய தொண்டுகள் கிராமஸேவைச்சென்றுசெய்து வருகின்றன. ஆகவே அத்தகைய ஸேவைகளின் பலனுகவும், ஆண்டவன் அருளினுலும், கிராமங்கள் தம் பழைய செழிப்பை யும், ஜீவகலையையும், தழைதழைப்பையும், ஆணிவேர் போன்று ஆதாரம் படைக்கும் தன்மையையும், புனிதத்தையும் பெறுவதாக.

நிற்க, மேற்கூறிய 'திருப்புடைமருதூர்' என்னும் கிராமத் தின் மஹிமையையும், தலம் மூர்த்தி தீர்த்தம் இவற்றின் சிறப்பை யும் பற்றிக்கூறும் பெரியநூல் ஒன்று, வடமொழியிலேயோ தென் மொழியிலேயோ தென்படவில்லை ஆதலால் கிடைத்த சிலசில பாக் களை ஆதாரமாகக் கொண்டு, ஆலயத்தினுள் காணப்படும் தேவேந்த் ரன் சிலை, ஸ்ரீ புடார்ஜுனேசுவரராகி திருக்கோவில் கொண் டெழுந்தருளியுள்ள பிரானின் லிங்க ஸ்வரூபத்தின் கோணிய நிலை, கோமதி அம்பாள் ஸன்னதியில் வாய்க்கப்பெற்ற வித்தரின் சிலை, தாமிரபர்ணி தீர்த்தக்கரையில் உள்ள அகஸ்தியர் கோவிலும் துறை யும் மருத மரத்தடி ஸ்வயம்புலிங்கம், இன்னும் ஆலயத்துள் காணப் படும் சிலசிலாசாஸனங்களும் எழுத்துக்களும், இனையவற்றைத்தக்க,

சான்றாகக்கொண்டு ஏழையேன் சிற்றறிவினனாய், "திருப்புடை மருதூர்' தலச்சிறப்பு" எழுதத் துணிந்தேன். தல புராணம் பாடுவதற்கு எளியேன் தக்க பாத்திரனல்லன் எனினும், பக்தி ஊன்றிப்புலம்பும் தொண்டனின் குதலை மொழிகள் எனக்கொண்டு, நேயர்கள் குற்றங்களைந்து குணங்கொண்டு அடியேனுக்கு ஆசி கூறுவார்களாக. இச்சிறுநூல் ஆறுபாகங்கள் கொண்டது. இந்திரன் சாபவிமோசனம்; கருவூர்ச்சித்தர் அல்லது வழுதூர் பண்டாரம்பக்தி மேம்பாட்டால், எம்பெருமானுடன் இரண்டறக்கலந்தது, விருத்ராசுரனைக்கொன்ற இந்திரன் தன் பிரம்மஹத்தி தோஷம் நீங்கப் பெற்றது, வாணி, ஸ்ரீ, பூதேவி மூவரும் தேவியைப் பூஜித்தது, மனுவுக்கு ஸர்வேசன் பிரஸன்னமானது, பிரம்மதண்டம் தல மஹிமை உணர்த்தியது இவையே இந்நூலின் உட்பிரிவுகள். ஆங்காங்கு தலவர்ணனை, தீர்த்தவர்ணனை, துதி, சிவனடியார் வரலாறுகள் முதலியன பொதிந்து கிடக்கின்றன. பண்டாரமெனினும், சித்தரெனினும், கருவூரெனினும் வழுதூரெனினும், பேதமின்றாம். உண்ணிலவும் விஷயம் ஒன்றே; அதாவது பக்தி மேம்பாட்டினால் பரமனுடன் பேதமற்றுக் கலந்தது. போதுமான சான்றுகள் இல்லாமைபற்றி, மேற்குறித்தவற்றையும், கர்ணபரம்பரையாக வரும் கூற்றுக்களையும், ஒற்றுமைப் படுத்தி, ஏதோ சில மொழிகள் பிதற்றியுள்ளேன். அவற்றைக் கனப்படுத்தவேண்டுமாறு எல்லாம் வல்ல அறிஞர்களையும், ஆஸ்திகர்களையும், மனப்பூர்வமாக வேண்டிக்கொள்கிறேன்.

இப்புண்ணிய பணிக்குப் பொருளுதவிய பெருமக்கள், இந்த தெய்வத் தொண்டில் ஈடுபட்டு, எளியேன் என் முயற்சியை ஆதரித்தமைக்கு, நான் எத்தகைய நன்றி கூறினும் மிகையாகாது. ஆதலால், அவர்கள், எம்பெருமான், பெருமாட்டியின் பரம கிருபைக்குப் பாத்திரர்களாய் மேன்மேலும் இம்மாதிரி அறச்செயல்களில் ஈடுபட்டு, புண்ணியம் ஈட்டுமாறு இறைவனை பிரார்த்திக்கிறேன்.

முடிவில், என் கூறுவன்? இச்சா, ஞான, கிரியா, சக்தியும் இன்னும் ஸர்வசக்திகளும் கொண்டுள்ள எம் பெருமான்,

ஸ்ரீ கோமத்யம்பா ஸமேத ஸ்ரீ புடார்ஜுனேசுவரர், அண்ட சராசரங்களுக்கும்,".ஆனந்தத்தையும, ஹிதத்தையும், ஸர்வக்ஷேமங்களையும் கொடுத்தருளவேண்டுமென்று யாவரும் பிரார்த்திப்போமாக.

அநந்த கோடி நமஸகாரம்.

4- உமா நிவாஸ்
பிராமன்வாடா-ரோட்
மாதுங்கா-பாம்பே 19
26—9—51

திரு. நா. பிச்சுமணி,
ஆசிரியர்.

# ஸமர்ப்பணம்.

---

காலனை யுதைத்துக்காலபாசம் தவிர்த்த, நீலத்தை ஏந்தி நில
மெலாம் நிறுவிய, கங்காதரனின் கழலிணையைக் கனவிலும்
போற்றிவாழும் சிவநேசச் செல்வர்களுக்கு

இச்சிறு நூல் அர்ப்பணம்.

**श्रीचक्रम्**



ஆரருள் சுரக்கும் அன்னை கோமதி தாள்
அகலா தனுதினம் அகத்திலமைப்போம்.

திரு. நா. பிச்சுமணி,
ஆசிரியர்.

உ

ஓம் ஸ்ரீ முருகா

ஸ்ரீ கோமதி புடார்ஜுனேசுவரர் ஸஹாயம்

# 'திருப்புடைமருதூர் தலச்சிறப்பு'

## காப்புச் செய்யுள்கள்.



### விநாயகர்

(1) மந்திரக்குழு மமெல்லாம்
மாபெருந்தலைவனென்கும்
மறை முதலாகி நின்ற
மத்தகக் கையன் பாதம்
மனனுறப்பற்றி ஏழை
முன்னிய தலச் சிறப்பு
மங்குதலின்றி ஓங்க
மாணடி சேர்த்துதும்மே

(2) சாரண கார்யம் யாவும்
காரண மெய்ஞ்ஞானம் யாவும்
கலைகள் நற்றிறங்கள் யாவும்
கருமத்து வினைகள் யாவும்
கருத்துறு நிகழ்ச்சி யாவும்
கலந்து நின்றாய்க்கும் வள்ளல்
கழலிணையேத்தி ஏழை
கழறுவன் காதை தன்னை.



## 2. பால தண்டாயுத பாணி

(1) விரை கடம்பன் நல்
வேத மெய்ப்பொருள்
உரை திறத்தவன்
ஊறறுத் தவன்
சிறைவிடுத்தவன்
செந்திலாதிபன்
செங்கழற்பதம்
சென்னி சூடுவாம்

(2) சொற்பதந் தப்புமோர்
செம்மையன் சேவலன்
நற்கருணை பொழி
நயன ஈாறினன்
தற்பத மொற்றியோர்
தீவினை மாய்ப்பவன்
கற்பகப்பதம் நினைந்
தேழையன் பாடுவன்

(3) பாலதண்டாயுதன்
பழனிவரைச் செல்வன்
ஆலமுண்டளித்தோன்
அரும்பெறற் குமான்
கோலமஞ்ஞை யிவர்
கூர் வேற்கையன்
சால அருளுதவி
சொற்றிறமளிப்பனல்,



# 3. கலைவாணி

நன்னுவதிந்தே நான் மறை வாணன்
மேம்படச் செய்யும் மேதகு செல்வீ!
தேங்குபிணி தவிர் தீம்பால் நிறத்த
துங்க வெண்ணிற தாமரைச்செல்வீ!
நற்கலை பலவும் நல்லறம் பலவும்
சாந்தியும் சக்தியும் சாற்றும் செல்வீ!
தெளிவும் பணிவும் தீந்தமிழறிவும்
தெய்வப் பணியும் தந்தருள் செல்வீ!
மழலைப் பேச்சிலும் மன்னு கீதத்திலும்
மதிவாய் மையிலும் மருவுஞ் செல்வீ!
மதியினும் ரவியினும் மலரினும் மணவினும்
மகிழ்வினு மொளிரும் மாண் புகழ்ச் செல்வீ!
மன மொப்பிஉனை மெய்த்துதி செய்பவர்
மாய இருள்வினை மாய்க்குஞ் செல்வீ!
மோனத்துருவாய் மேவியே நின்றான்,
மன்னு மறைத்தலை மாமதி சூடி,
கன்மனக்கயவர் காலனும் கந்தனைப்
பயந்த பரமன், பார்வதி மகிழ்னன்,
மகப்புலால் வேண்டி மகத்துவம் விளக்கிய
அன்பர்க்கடிமை செய் அமலன், அழகன்,
புடார்ஜுனபதியின் பூம்புகழ்பாடப்
பணிந்தேன் மனனுறப் பணிந்தேன் மிகவே.



## 4. குலதெய்வம்— ஸ்ரீ வேங்கடேசப்பெருமாள்

---

தேன் மொழியாகும் தென் மொழி நாட்டின்
வடவெல்லை வரை வாதனே ! எந்தாய் !
குன்றமெடுத்த குணநிதி ! கோவே !
அறந்திறம்பிய அவுணரை மாய்த்தே
அடியாார் தமக்கோர் ஆதரமளித்தோய் !
சிறுவடி வாகிச் செருக்கடர் மனத்த
மாவலிக்கேற்றம் மன்னியருளியோய் !
துங்கவர் துணையே! பொங்கும் பரிவால்
புடைமருதூரின் பீடினைப்புலர்த்தும்
பேதையன் புன் மொழி புனிதமாகவே
வேங்கடேசனே ! வரம் தருவாயே !

---



## 5. ஸ்ரீ புடார்ஜுனேசுவரர் என்னும் நாறும் பூ நாதர்.

---

திருமகளுலவும் திருமணி வண்ணன்
கண்ணற்கன்பன் காண்டீபனெனும்
விசயனோர்கால் விண்ணவா! உனையே
கழலுறக் கருதிக் கடுந்தவமேற்கொள்
கருமத்தியைந்தான் கடு நோன் பினனாய்
அன்னவன் மெய்ம்மை அவனியோரறியவே
விடங்கவேடனாய் வீறுப்புடனே
வனவிலங்குதனை வ்யாஜமாய்க்கொண்டு
வல் வழக்கு தொடு வம்பினனானாய்.
கரைகடந்தோடும் கடும்புனலன்ன
கடுந்தவன் கடுத்தே, கண்டனே! நின்பால்
பற்று முதிர்ந்தே அற்றனன் பொறுமை.
தவத்தினைமுறித்த திறத்தின் விலங்கையும்,
விலங்கு விடுத்த வேதியா! நின்னையும்,
ஒப்ப நோக்கியே ஒடுக்கினன் மறத்தை.
சிவன்பால் விடுத்த சிந்தனை குலைத்த
சிவனே! உன்னையும் செற்றனன் வில்லால்

ளையப்புடைத்தான் நெறிவாழ் குரிசில்.
வடிவு காட்டவே வேண்டினன் கிரீடி,
கழிவிரக்க மது கொண்டே வத்தினன்.
அண்ணலே பொறுத்தாய், அவன் செயல் மகிழ்ந்தாய்,
பற்றினைப் போற்றினுய், பார் வில்லளித்தாய்.
அன்னவோர் பற்றினுல் அகண்டனே ? அறிவிலேன்
பொன்புடை மருதூர் புரக்குந் தேவாம்
நின் புகழ் பரவினேன் புன் மொழி சிலவால்.
வில்லாயிருப்பினும், கல்லா யிருப்பினும்,
செருப்பா யிருப்பினும், செறுதடியாயினும்,
அரிய மூதாட்டியின் அன்பிடு பிட்டை
அருந்தியவரயா ! அன்பர்க்கடியாய் !
அன்பனென்பாவினை ஆதரித்தருள்வையே !

---



(ஸ்ரீ ராஜராஜேச்வரி)

## 6. மாதா கோமதி அம்பாள்

---

சீர்பாற் கடலில் சனித்த விடமது
சகமெலாம் எரிக்க, செழுஞ்சுடர்க்கண்ணன்,
அண்ட மனைத்தினுக் காதாரம் படைப்போன்,
நச்சினை உண்ணவே நாடினன் அளியால்.
அக்கணம் காத்தனை அழகனோடவனியும் ;
பச்தர் வயத்தான் பாகமு முண்டனை ;
பக்தர்க்கெளியையாய் பரிவுருவாயினை.
கமழ் பூங்கா சூழ் கண்ணியை தலத்தைக்
காக்கும் தேவி ! கோமதி அன்னையே !
புடை மருதூரின் புகழ் பெயலுற்றேன் ;
பாமன் பாவாய் ! பாதம் துணையென,
பனுவல் செய்வேற்கு அனுகுணம் புரிவையே.

---

ஓம் — ஸ்ரீ முருகா.

# திருப்புடைமருதூர் தலச்சிறப்பு

---

ஸ்ரீயை மார்பிடைச்சிறப்புடன் தாங்கி
பாந்தளே யணையாப் பயிலும் யோக
உறக்க வயத்து உறுவட விலைமேல்
பள்ளிகொண்ட பெம்மான் மிதக்கும்
ஓஷதி சூழ்ந்த ஓர் அவனிதனின்

திலகமாயமைந்து தூய்மையின் வாய்ந்த
பாரத பூமியில் பாரமபரையாகப்
பனுவலின் தேர்ந்த பல்லரு புராணச்
சிறப்புறு காதை சீருடை வயத்து
நெறிகாட்டுபவும் நேர்மை பயப்பவும்

பலபலவுண்டு, பகரு மவற்றுள்,
தக்ஷிண வரம்பின் அக்ஷமெனவே

## ஊர்ப்பெயர், எல்லை

பொலிவுறுபேரூர் புடார்ஜுனமெனும்பேர்
நாறும் பூநாதர் நலமுடனுறை செயும்
புடைமருதூரெனப் புகலுமோர் மூதூர்

அம்பைத் தலத்தின் அண்மையினுள்ளது
நெல்வேலியெனும் ஜில்லா மாண்பின்
புகலுறு பேர்தலப் பலவி னொன்று ;

## அகத்தியர் பொதிகை மேவியது.

## தமிழ் பரப்பியது.

உமா மஹேசன் உறுமணக்கோலம்
காணவே மன்பதைக் கோடி இமமுற,

தென்றிசை சாயத் தீம் புனல் சூடி
நடுவு நிலைமை நாட்டில் நிலைபெற,
கடலைக் குடித்து கரிய அரக்கனை
முடுக்கியெற்றிய மூதறிதவத்தோன்
முனிவரின் முதல்வன் மென்றமிழ்த்தெய்வம்

குறுமுனி விளித்து, 'கருத்துடன் காக்க,
தென்றிசை செல்க, தரிசனம் தருவோம்,
இன்பவல்லியொடு இன்றே நாடுதும்,
ப்ரவேச ஹோமம் பொதிகையில் புரிவோம்.'
என்றே பணித்த எம்பிரான் மாற்றம்

சிரமேற்கொண்டு பருவரை மேவி,
தாமிரவர்ணி தனிப்பிறவி கொளும்
பொதிகைத்தலத்து பேர்தவத்துற்று
கரும முற்றவே கழிபெருவகையின்,

## தமிழ்ப் பாஷைச் சிறப்பு

திகழ் மென் 'ழ' கரத் தனிச்சிறப்புடைய

தேவாரமொடு திருப்புகழ் முதலா
நாரணன் விரும்பும் நாலாயிரப்பா
குறள் திருமந்திரம் கருத்துடன் மொழிந்த
புனித நூல் பல புராண நூல் பல
சாத்திர நூல்பல சதுர்வித அர்த்தமும்

பயக்கும் நூல் பல பயந்த பாஷை,
அருகன் முருகன் அக மகிழ் பாஷை,
பெருமூவேந்தர் பன்னாட்டரையர்
பரிவுடன் போற்றிப் பெருக்கிய பாஷை,
வீரம் செறிந்த வியன் பெறுபாஷை,

தொகையிட வரிதாம் தொன்மை தொட்டுத்
தென்றல மேவிய தேனிகர் பாஷை,

ஓம்புங்கள் கருத்தாய் ஒண்டமிழ்ச் சங்கத்
தலைமை வகித்துத் தண்டமிழிசையைக்
காலெனப் பரப்பிச் சாலவு மூன்றிய

செய்ய நாட்டின் சீர்வளப் பகுதியின்
திலகமாயது திருப்புடைமருதூர்,
இவ்வூர் வரலா றியம்படல் துணிவாம்:—

## கோதமன், அகல்யை.

அகல்யை, இந்திரன் சாபம் பெற்ற வரலாறு

பண்டையோர் நாள், பல்வளம் புரக்கும்
கண்ணகல் நாட்டின் கருத்ததாகும்

கங்கையாற்றின் கரையிடப் புறத்து,
அடவியொன்றில் ஆர்தவ மேவி,
அருமையினில்லறம் அழகு பெறவே,
அகலிகை யெனுமோர் அதிகுணரம்யக்
காரிகையுடனே கருத்தொருமித்து,

வாணுண்டத்தி, வாடா நலத்தின்,
கால மூன்றும் கண்ணிமைப்பின் முன்
கருதியோர்ந்து கரு மங்தொடுத்துக்
கன்ம வினையின் கழிபந்தமென
முளரி யிலையுறு மா நீர்த்திவலை போல்

பற்றியும் பற்றுப் பான்மையின் படர்ந்த,
பழியொடு புகழும் பாங்குறச்சொண்டு,
மேலவன் கழலே மெய்யென நம்பி,
சடை யாத்தவ நெறி சால்புற உரமாய்க்
கால மீர்த் திட்ட கோத மக்கலைஞன்,

அறந்திகழ்ந்தோங்கும் பர்ணசாலையில்,
செறிந்தெழுந்தோங்கும் சொர்ணவொளியின்

பைங்கொடி செடியினம், மைய லர்வாரின்
கண்ணின் மானினம், கைதவமறியாப்
புள்ளினந்துணையாப் புனிதக் குடிலில்
இன்னலூறின்றிப் பன்னாள் கடத்த,

## இந்திரன் காக்கை யுருக்கொண்டு கரவாடல்

இணையிலா வெழிலின் இம்பருலகத்
தமராவதியில் ஆண்மையோடாக்ஷி
அழகுறு செல்வமனைத்தும் பெற்று
கற்பகத்தருவும், காமதேனுவும்,
அமுதகலசமும், அலகிலா வாழ்வும்,
சங்கபதுமச் செழுநிதி பலவும்,
துய்ய போகமும், திறமிகவுடைய
கதிர்மதி காலொடு காலாந் தகன் முதல்
தேவகோஷ்டியின் தலைமையுமுளவாய்,
தேவேந்திரனெனத் திகழும் போகன்,
பைம்பயிரிடையே பிரியா நட்பின்
போலித்தனத்துப் பரவி ஊர்ந்திடும்
பைம்விட வரவு, மைக்கருக் கொண்டு
மந்திர ஜால மாப் பெரு வித்தை
பயில்வோரன்ன, பூங்கொடி யொட்டித்
துயில்வது போலும் திறமுடன் கிடந்து
தன்னை யண்டினரைத் தீண்டியே மிக்க
நச்சுருத்தியுயிர் நச்சியே யகற்றிக்
கொடுமை விளைத்துக் கேடு சூழ்வது போல்,
காலவேற்றுமையின் கெடுமதி யுந்த,
கள்ளம் புனைந்து துள்ளு முள்ளத்துக்
கற்பின் வழாஅத கோதமன் பன்னி,

அகலிகை தன்னை யணையவே யுன்னி,
நள்ளிருள் சூழ்ந்த நணணருகங்குல்

அர்த்த யாமத்து அந்தகப் புள்ளாம்
காக்கையுருவுடன் கடுகி முடுகி,
அருந்துயிலயர்ந்த அருந்தவன் சாலை,
அண்மையினமர்ந்து அகல்வாய் திறந்து,
'கா கா' வென மிகக் காழ் தொனி எழுப்ப,

## கோதமன் துயிலெழுந்து நீராடச்செல்லல்

கனி துயில் துறந்து கோதமனெழுந்து
காலைக்கடன்கள் கருத்துடன் முடிப்ப
இனிய கீதம் இசை பெறப் பயின்று
இரு முதல்வனடி இறைஞ்சி மனனால்
கங்கை நோக்கிக் கடிதின் மேவினன்

## இந்திரன் மோக நிலையும் பழிச்செயலும்

கதிரொளிகதுவிக் கருமிருள் படர்த்தும்
கடுவிட மனைய கரு நீலத்தின்
படலத்தியைந்த படர் மேக மென,
அழிவுறு காலம் அணித்திடும் வேளை,
இயல் நற்குணமும் இரிந்து மாய்ந்து,

ஒன்றிய ஒண்மையும், ஓர்ந்த அறிவும்,
கலைதரு ஞானமும், கழிமிகப் பெருமையும்,
உம்பரின் கோனென உயரிய உரிமையும்,
அரி அரன் முதலா அளித்துள அருளும்,
அறவே மறந்து, அயல் மாதின் பால்

வைத்த சிந்தையின் வாழ் நலன் துறந்து,
மானம் குல முதல் மன்னொரு பத்தும்

நீத்து நாச நெடுங்குழி வீழ்வான்
மிக்க தீவினைக்குத் தக்கவோரமையம்
கரவு நெஞ்சொடு காத்திடு வினைஞன்

அகலியை அல்குல் அழி தசை யகத்து
அகலா ஆர்வத் தழுங்கிய விளைவால்,
பயனோராது பாபந்துணிந்து,
மூண்டு மூண்டெரிவது மண்டு தீயெனினும்
மடியொடு மடமைகொண் மாசுணம் பெயராது

அங்கியில் வெந்து ஆருயிர்கக்கும்;
அங்கண் முன்னிற்பது அவல மெனினும்
இழி தருகருமத்தியைந்த அற்பர்
ஆசை மேலீட்டின் அறியார் நாணம்
அகலாதழிவர் மீளா வழிக்கே!

அத்தன்மை யொடு கந்தரக்கோமான்,
ஞாலம் போற்றும் வாலற முனிவன்
துங்க இல்லறத்தூய்மை பழிபட,
சாலையுட் புகுந்து சீல வணங்கை
பெரும் பழி நிலைக்கப் புல்லினன் சுரபதி ;

## ஞானதிருஷ்டியால் கோதமன் இந்திரன் செயலறிதல்

வேதபாரங்கன் கோதம மாத்தவன்,
ஞான வரோதயன் மோனங் கலைந்து,
மூதறிவு கொடு முன்னிய காலை,
மானங்குலைத்த மன்னவனிழி செயல்
முற்றுமுணர்ந்து முடுகினனிற்பால் ;

## அகலிகை சோகமும் சாபமும்

நாணமொழிந்த நங்கையர்க்கரசி,
வெம்புளி பெய்த வெம்புண்ணெனவே
சுவறு நெஞ்சமும், சோர்வொடு அச்சமும்,
தவறினையோர்ந்து தளர்வுறு சித்தமும்,
கழிவிரக்கம் குறுக்குறு யாக்கையும்,

கொண்டு நின்றனள் கற்சிலையன்னாள்,
கொழுநன் முகந்தனைக் காணவு மாற்றாள்,
காற்பெரு விரலின் குறித்த பார்வயின்
நிமிராச் சிரத்தின் நிலைத்த தன்மையள்,
பீடறச் செய்து பீடை யீட்டிய

வன்னர குறித்தவரம்பி லீனத்துக்
கடன் றெரிந்துய்வோர் கனவிலும் விழையா,
கற்புடை மகளிர் கேட்கவும் சகியா,
கேடுறு கருமம் கணத்திற் புரிந்த
மாப்பெருபாபம் மனந்தனைச் சிதைக்க,

செயலொழிந்துள்ளம் அறிவொழிந்திட்ட
அடாத கருமம் விடாது வாட்ட,
புகல்மொழி யிலளாய்ப் புன்மொழி யேற்ற
வன்றுயர் கொளுந்தும் வெம்மையினாற்று
தயர்வுறு தேவி அகல்யை யணங்கின்

பரிபவம் கண்டே பரிவுடனோக்கி,
கொள்தவப் பெரியோன் கோதமன் கழறுவான் :

### கோதமன் கூற்று.

பேதுறல் ! பேதாய் ! போகிய நின் செயல்
நன்று ! நன்று ! நகைப்பர் உலகினர் !
ஊனங் கொண்டாய் ! உயிரினு மகன்றிலை !

உலகினுத்த மிகள் உமிழ்ந்துனையிகழ்வர்!
நெறி முறை பிறழ்ந்து நேர்மை மாழ்கியே
பொய்யின் பெரலையின் பெருங்கொலையின்னிழி
புலையனும் விரும்பாப் பாப கருமம்
ஓராதுற்றனை! ஒல் விதியுந்த,

விட மருந்தினை! வீணி லொழிந்தனை!
இசையே யுரித்த இருந்தவத்தென் குலம்
வசையாலிரிய வோர் வாளா கினையால்!
நங்காய்! அணிகலன் நாணென் றுணர்ந்தும்
பயிர்ப்பெனும் பண்பு பதறிப் புடை கொள
பயின்ற நின் பழிச் செயல் பனுபவற் பாலதோ!

## அகலிகை சாப முற்றது.

என முதலா வியங்கிழி மாக்களும்
இயை தலில்லா இசை யொழி கருமம்
கருதிய தேனோ? காரிகை மொழியாய்!
உற்ற வினை தான் உந்திய வாறோ!

கழறு வதறியேன்! என்று மனத்தின்
குன்றெனக் குவித்த குறைவறு தவமும்
குன்றி மாய்தல் காண்டிலை! கொடியோய்!
வரம்பிகந்த வோர் வசையின் மேயிய
நின்புன்யாக்கை நீண்டவதரின்

நெடுங்கல்லாகி நெடுவழி கிடக்க!
காசினி காப்பான், கரியன் செம்மல்
தசரத மகவாய்த் தாரணியுற்றுக்
கௌசிகன் மகமது காத்தற் றொழிலின்
கடுவன முற்றுக் கடக்குங் காலை

கழலிணை மலரின் கழி மிகப் பந்தம்
உறவுடனோடும் ஊழ்வினைப்பயனே!

பண்டு போலாவாய் பேதையே புலர்த்தி !
என்றிசைத் தனனால் ஏதமில் வாழ்வின்
கோதறு தவத்தின் கொடுமுடிக் கௌதமன்

கற்பொசித் தாளைக் கற்சிலையாக்கிக்
கண்ணிமையார்தம் கோமகன் வியக்
கடுமொழி போக்கினன் கடிதின் மன்னோ !

## இந்திரன் சாபம் பெறல்

புன்புலால் யாக்கை புழுமலிக் குடம்பை
கொப்புட் புறத்த கவர் தசைப் பிண்டம்

கருத்தாக் கொண்டு கருக்தொழிந்தனையால் !
அமுதமுண்டு அருநல மீண்டி
அருந்தவப் பயனின் அமரரிறை யென
செம்மையின் வழாஅத சீரிய நிலையின்
உற்றக்கண்ணும் ஊறு நினைதியோ !

அரணழிக்குமோ அகலிட மாடம் !
பைங் கூழ் காக்கும் புனத்த வேலி
பயிரை யழித்தால் புகலிடமேது ?
ஈன்ற குஞ்சினை யிரிந்தே புண்ணும்
தாயுமுளதோ தகவிலோய் புகலாய் !

தவத்தோர்க் காணாய்த்தகைமைச் சாலுலகின்,
பொற் பூங்காவின், புவியினிலக்கின்,
புனிதர் குழாத்தின், புரக்குங் கருமப்
பல் திறத்தேவரின் புரவலனையும்,
புன்றொழில் பூண்டு புவியிடைப் போந்து,

பேரிள மங்கையின் பேரணி செகுத்தியேல் !
அகந்தையின் வயத்து அறமுறை நழுவி
மாண்பு குலைந்து மாழ்கப்போதியோ !
கழறுவதென்னோ ! கன்னியை அறத்தின்

கொள்தவப் பேற்றினைக் கோறன் மேயினாய் !

இருவிழி படைத்தும் இருள் சூழ் மனத்தின்
புரிதலின்றோராப் புன்மைய னாய் !
ஆழ்தி ! ஆழ்தி ! அழுங்கிய உடலம்
காதல் வெம்மை கரவுடன் கொண்டவா !
வெம்புண்ணோடு வெந்துய ரெரியாய்க்

கணணென நாடிய கழிமலக் குழியின்
வடிவாக்கொண்டு வெம்பியே திரிவாய் !
அரனைப் போற்றி அருந்தவங் கொண்டு
அகலு மாற்றினை யணுகுவாய் மன்னோ !
எனவே சூளுரை ஏந்திய சினத்து

ஏந்தெழிலாட்கும் எழினகர்த் தலைக்கும்
சொற்றிச் சென்றனர் சோர்விற்றவத்தர்
அன்னவாறே ஆயினரன்னார்.

## இந்திரன் கௌதமனிடம் விடைபெற்றேகல்

ஆயிடைக் கண்ணே அருந்தவன் பதத்தின்
ஒண்முடி சேர்த்து ‘ ஓ ’ வென்றலறி

கழிவினிரக்கம் கழிமிக வுளத்தனாய்
பண்டு செய்த பாபவினையினுக்
குற்றவாறே யுறுவது முரைத்தீர் !
தெம்பிய மனத்தின் திரிந்து கோடிய
தீ தோராது திறம்பிய சுணங்கன்

உழன்று திரிதல் உரித்தே ! உரித்தே !
புவியினுக் கணியாய்ப் பொறைவடி வாய
புண்ணியமுனியே பூங்கழல் பற்றினேன்.
பொறுத்தருள் கோவே ! போதம் புலர்த்தி !
சேயிழையாக்கை செம்மனத்துன்னிச்

சேறு பூசினேன் செம்பொன் னுடற்கே !
கொன்றேன் மாண்பினை ! விண்டேன் னெண்மதி !
ஈரேழுலகும் இச்சகம் செப்பி
இசை மொழி சூட்டு மிடும்பை யனுபேனேன் !
இன்றே செல்வன் ! இமய வரையான்

பச்சிளமகவைப் பாகத்திருத்திய
கோமானண்ணல், கொடு முடிக்கயிலை
வாழுநன், பரமனை வாழ்த்தியே வகைபெற,
என்றே போயினன் எழும்பிணி மனத்தோன்
நிலைதிரிந் திழிந்த நீடுயர் வச்சிரன்.

## இந்திரன் அரனைத் தோத்தரித்தல்

பிறையணி பெரும ! பெரும்புனலொடுக்கி
வேணியின் சூடிய வரத ! நின்னடி.
கரிதொக்குடுத்துக் காரியை நீரின்
வரவளம் பாய்ச்சும் வரத ! நின்னடி.
வரை மகள் கொழுந! வரம்பிகந்தெரித்த

கால நச்சினைக் கணமதி னுண்டு
கரிய கண்டனாய்க் கொடுவினை யொழித்துக்
கண்ணகல் ஞாலம் காத்தோய் நின்னடி.
தருக்கொடு மேயிய தக்கனை யழித்து
தேவர்மெய் விதிர்ப்பைத் தீர்த்தோய்! நின்னடி.

பான் முலை மணமும் மாருத் தாரத்துக்
கொவ்வைக் கனியொடு கோண் வெண் முத்தம்
அன்பினூடும் அதரமும் பல்லும்
எழில் செய் வதனம் ஏந்து தவத்தின்
மேவினதாகி மேம்படு உளத்தள்

மெய்ந்நெறி மெச்சி மென்மலர் சூட்டி
வகையுடன் மணந்து வாமத்திருத்திய

நச்சினார்க்கினிய! நல்லாய் நின்னடி.
கூடற் புரியான் கோடாச் செங்கோல்
வழுதி மகளை விருப்புடன் மருவி

கயற் கண்ணியுடன் கோயிற் கொண்டு
திருவிளையாடல் திகழ்ந்தனை! நின்னடி.
சைவ சமயம் சிறை விரித்தாட்டி
தேனினினிய தேவார மூறை
பத்தின் மேலாய்ப் பண்ணொடு பனுவிய

நால்வரின் மனத்து நிறைந்தாய்! நின்னடி.
அடியார்க்கடியென அரும்பெயரிலங்க
அகங்கனிந்துருகுவார்க்கப்பா! நின்னடி.
அன்பே சிவமெனு மருமொழியோம்பி
அன்பராபதம் அழித்தோய் நின்னடி.

செந்திலாதிபன், செந்தமிழன்பன்
கருணைவடிவான், கருமந் தொலைக்கும்
கலியுக வரதன், கார்த்திகேயனை
அறு முகவேளை அருண் முகத்தோடு
சரவணப் பொய்கையில் சீருடன் பயந்து

சூரனாதியரைச் செகுத்தோய்! நின்னடி.
முப்புர மெரித்த முதல்வா நின்னடி.
காம மாதி கடும்பகையாறும்
ஆணவ முதலா அசழ்த்தும் மூன்றும்
தொடர் வினையோடு தொல்லைகளெல்லாம்

தெறித்தேயோட்டும் தெரிநெறி யோத
தக்ஷிணா மூர்த்தியாய்த் தெரிந்தாய்! நின்னடி.
மறலியன் பாசம் மூண்டே யீர்த்திட
மகதே! மகதே! மன்னிப் புணர்ந்தே
மன்னா! காவென மலைந்த மதலையை

முன்னும் பரிவொடு முன்னியே புல்லி
பத்தினோடாறாய்ப் பல்லாண்டிருக்க
மெய் வர மருளி மிருத்யுவை யெற்றிய
சேயிடை யூர்தி ! செக்கர் வண்ணா !
அறங்கொலி கட்கு அங்கிக் கண்ணும்

புண்ணியர்க்கருளும் பயப்பாய் ! நின்னடி
கோதமனாணையின் கொடும்பிணியுற்ற
நாயனை யூக்கி நயத்தலு மென்றோ ?

## அரன் தோன்றி யருளல்

என்றே இசைத்த ஏங்ககத்திறைமுன்
வண்ண மளித்தனன் வெள்ளிவெற்பினன்.

ஐம்புலனொடுக்கி ஐயறு மனத்தின்
அரன்பதமன்றி ஆதரமில்லென
துளி வீழ் நோக்குந் தூய சிப்பி
அம்முத்தின அங்காத்தனைய
வித்தாயிருந்த வெம்பவமொழிய

புனிதம் பிறக்கும் பேற்றையுன்னி,
நோன்பின் கடுமை நொறுக்கிய யாக்கை
இரங்கு மசமது குறுக்கிய ஆவி
தாங்குறு நிலையில் தவிக்குங் கோவை
காண்டனன் பெம்மான் கண்ணளி சுரந்தான்.

## அரன் கூற்று.

மெய்ந்நெறி இகந்து மானஞ் சிதைந்த
உம்பர் தலையோய் ! உற்றனயாவும்
உணர்ந்தோம் மிகவே உறுவது கேட்டி ,
வண்மையி னுறையாம் வளஞ்செறி ஆவின்
பின் செலா நிற்பாய் ! பீடுறு மனத்து ;

நாகம் விடுத்து நண்ணும் புண்ணிய
மாநதி தாண்டி மத்திய பீடத்
தலமது தாண்டித் தென்னாடுய்வாய் !
தலமூன்றின் கண் தஞ்சைசாற் சுரபி
கிடக்கு மாற்றுன் கிண்டிய விடத்து
எம்முருத் தோன்றும் ஏற்ற முடைத்தாய்,
மருதை யடியின் மாண்போடெய்தி
எமக்கோர் கோயில், நியமத்தமைத்து
நாளும் பூசனை நடை பெறச் செய்வாய் ;
அன்னவாறே அகடெலாம் பின்னிட
அகல் பாரதத்தினப்புறக்கோடியின்
தீம்புனலமுதத் தாமிர வருணி
தென்முனையண்மை தெய்வ யாற்றின் கண்
அரும் பெருந் தலத்து அருச்சுனத்தடியில்
யாமுளகண்டு ஏந்தெழிலாலயம்
சமைத்தே செய்ய செழுமலர்ப் பூங்கா
நாறும்பூ நாதநாமஞ் சூட்டுவாய்.
தேவா மறையத் தோன்றிடுஞ் சோதி.
கடனைகலக்கும் கழிமிகப் பெருமை
கொண்ட பேராற்றின் கொள்ளுந் தவத்தின்
மூழ்க முழ்க மூழ்கு முன் பவங்கண்.
வெம்பவம் விண்டே வெம்புண்யாக்கை
மன்னு புகழொடு முன்னெழில் பெறுமால்.

## தக்ஷிணகங்கை

செய்தீவினைக்குழூ செங்கதிரோன் முன்
பனிப்படலமது பறந்தே கரத்தலின்
சடிதியின் மாயும் செம்புனல் யாறு,
ஆழிசூழ் வையத் தருநதி பலவுள்
புனித வளத்தொடு போற்றருதலங்கள்
நிறைவுறு கங்கை நீடுநல் யாற்றிடைக்
கழுமல மறுக்கும் காசித் தலமது

ஓதற்கியலா வொண் பெயர் வாய்ந்து
இம்மைக் கடலை இமைப்பிற் கடந்து
மறுமைக்கரை சேர் மரக்கலமாகும்
மாசினை யெரிக்கும் காசி யென்பர்.
தொன்னகர் மகிமை அன்னணமாக
தென்றிசைக்காசி தென்புனல் கரையில்
நலமுடன் நாட்டிய நாறும் பூ நாதர்
காப்புடைத் தலமெனக் கொள்ளுமா காணி !

## இந்திரன் வணங்கல்

என்றே யருளிய எம்பிரான் மாற்றம்
செவியின் மாந்திச் செம்மனத்துய்த்துப்
பொம்மலுற்றுப் பேருவகையினொடு
ஆகண்டலன்றன் அணிகரங் கூப்பி,
அராவணி அம்மான் அணிகழலுன்னிச்
சேவடி யிடத்துச் சென்னி பொருந்த
ஆழிய கரணம் அசை வற வடங்கி,
ஊழியினுயர்ந்தோர் உள்ளொருமித்து
ஏகநாதனை யேத்து மாறுபோல்,
மெய்சிலிர்ப்புறவும் மனங்க சிந்துருக
கண்ணீர் மல்கிக் காதல் விம்மிடவும்
அத்தா ! முத்தா ! அருண் மழை பொழியும்
அமலா ! வித்தகா ! அருமறை யோதும்
அருவுரு வில்லாய் ; அன்பர்க்கெளியாய் !
பிஞ்ஞகா ! பரம ! பிநாகி யென் சூலம்
கரமிசை கொண்ட காலகாலாந்தக !
கண்ணுமி ழெரியும் கையினிலெடுத்த
மூண்டெரி மழுவும் மன்னிய உடலின்
தழனிறத்துடனே தீம்பவமெரிக்கும்
பைந்தமிழ் வள்ளால் ! மைபிரு செருக்கின்
புலவர் தலையான் புகலிசை வல்லான்
வீரப்புலவன் கீரனைச் செற்றவா !

தருமிக்குதவிய தகை பெருந்தகையே !
தஞ்ச மென்றுரை அஞ்சலென்றி யம்பி
ஆதரம் படைக்கும் அழகனே ! குழையாய் !
போற்றிசை மாபுர பொன்னப்பலத்தே
சூக்கும நடனச் சுருதிப்பிழம்பே !
வரையன் மகளொடு வரையிலானந்த
ஆட்டமாடினை ! ஆட்டுவிப்பவனே !
ஆட்டிடில் அரனே ! ஆடார் யாருளர் ?

## இந்திரன் விடைபெற்றேகல்

கள்வனென்றென்னைக் கழுமலத்தழுத்தா
தின்புறச்செய்தே இன்னருள் பொழிந்த
இகலறுகோவே ! இணையடி இறைஞ்சினேன்
மெய்த்தவமுனிவன் மேலவன் கோதில்
குணத்தன் கோதமன் கூடிய சினத்தின்
வெகுண்டு கூறிய வீறுடை மொழியின்
தீவிளைவாற்றுத் தீவினையேற்கு
இற்றதுவெம்பவம் உற்றவோரறிவின்
புன்மையின் மலக்குழு பரவிய யாக்கையும்
புனிதம்பெற்றது பேரெழிலுற்றதால் !
பவம் பிறக்கிடவே தவத்தாலெய்திய
பேற்றினைப்பெற்றேன் பற்றிலர்க்கிலக்காம்
பற்றுவார்க்கரணாம் பதம்பற்றினனாய் !
ஏகவிடையருள் ! ஏகம்பவாண !
என்றேயிசைத்தனன் ஏங்கெழில்புரியான்
விடையுமீந்தனன் விடையமரண்ணல்
பொன்னகர் மீண்டனன் பொற்புடைக்கோமான்

## புடைமருதூர் ஊர் மக்கள்பெருமை

ஆர்கலி சூழ்தரு அவனியின் கண்ணாய்
அமைந்த மூதூர் புடைமருதூரென
பீடும் வாய்மையும் புனிதமாக்கள்

நிறைவுறு நலனும் நீடுழிவாய்ந்து
நாறும்பூவான் நறுங்குழற்பாவை
கோமதியுடனற் கோவில்கொண்டு
கடைக்கணருளிக் காக்கும்பேரூர்,
ஆயவண்ணம் அறைந்தோம் சிலவே
கண்ணெழிலொளிரும் களிநிறமலரினம்
பலவுஞ்செறிந்த பல்பூங்காவின்
எல்லையுள்ளாகும் நெல்லையம்பதியின்
அண்மைத்தாய அழகின் உறையூர்
இருமுது குரவர், இருங்கலைவாணர்,
செய்கடன் வழுவாச் செய்யபண்பினர்,
அறமும் பொறையும் மறைநெறி வாழ்வும்
அன்பின்வழா அருள் அகமும் வண்மையும்
தன்னலங்கருதாத் தண்மைத்திட்பமும்
கொண்டே இலங்கும் குடிநலம்புரப்பர்,
தம்முரித்தாக்கித் தீவினையச்சம்
அணியாப்பூண்டு அறத்தின் சால்புடை
இல்லறத்திருந்து இனிமைபயப்பர்,
பற்றொழிலாளரும் பஃறலையுடைய
ஓருடலொப்ப ஒருமித்தவராய்
ஒற்றுமையாகும் ஒண்பெருகுணத்தின்
குன்று குவித்தே கரிசிலா வாழ்வின்
குன்றா மகிழ்வொடு கூடியகருமத்
திகலிகந்துறையும் தகவுடைநலத்தார்,
குழுமிய பாங்கொடு செழுநலஞ்செறியூர்
குடதிசைக்கண்ணே குடமுனியமர்ந்த
சந்தனப் பொய்கைச் சந்தவெற்புளதாம்
அமராதிபனின் அழியுறு பவங்கள்
தீம்புனலாடத் தேய்ந்தே தீர்ந்து
மாயுங்காலை மாமுனியுற்று
ஆசிகூறி யாங்கணெய்திய
சான்றுமுளது சாலச்சிறப்பின்

சீதளத்துறையணை சிலைநுவலுவதால்
வெங்சலியாள, வெங்குறைமல்க,
செம்மனவாக்ஷிச் செங்கோல்கோடி,
பிணக்கும் துணுக்கும் நணைத்துறு செயிரும்
'நான்'எனும் பெயரின் வேற்றுமையேழும்
தேற்றேகாரத்தொனியுடை முடிவும்
தலைவிரித்தாட, தகுநிலைதவறித்
திரியுங்காலும், இரியாப்பண்பின்,
விரைபுனல் தன்முன் வளைந்திட்டாங்கு
நிமிரும் நாணலாய் நேர்மையின் குன்றாப்
பணிவொழுணு யரிவுடைமக்கள்
வாழுந்தலமாம் வண்ணமூதூர்

## அன்னை கோமதி மஹிமை

பில்லி சூனியம் பிடாரியென்றிசைக்கும்
இடும்பை பலவும் இணையிலா வரதை
கோமதி சதியெனக் கொண்டோன் பினர்க்கு
இல்லாதாகும் இமைப்பின் போழ்தில்
திங்கடோறும் திறனறிமாக்கள்
பல்பிணிவாட்டும் பல்லோர் நண்ணிப்
பரதேவதையைப் பரவிப்புகழ்ந்து,
ஆணையிற்குறித்த அகவையின் றங்கி,
இந்திரற்குதவிய இரும்புனலாடி,
நாடொறும் பூசனை நியமத்திட்டு,
'அன்னாய்! வரதே! அண்டினோர்க்கரணே!
மலையன் பாவாய்! மலைபோலுற்ற
மலைவினை யகற்றாய்! மிலைந்தே நோவுடன்
ஆற்றுகில்லேமே! அருள்தாராயோ!
உற்பதம்பலவும் உன்னடியணைந்தோர்க்
குண்டோபுகலாய்! கண்டன் சரும்பே!
நரரொடு வானோர் அறஞ்சிதை அவுணர்
தேவர் மூவர் திருமால் பயந்த

அயன் படைப்பினில் அடைவுறு எவரும்
சக்தி உளரெனச் சொற்றப்படுவரோ!
சக்தி நீயலையோ! செஞ்சொற்பயந்து
கயற்கண்ணருளிக்காவாய்! எனவே
கரணமூன்றும் கற்பகத்தாளில்
கருமம் சொல்லொடு கருத்தொருமித்து
வேண்டிநிற்பரால் வினையுந்தீர்வர்
இன்றும் நிகழுமோர் இயலீதாமே
கோரிய வரங்கள்கொண்டே மகிழ்ந்து
இகபர வின்பவிறும் பூதெய்திய
இணையறு நலத்தோர் எண்ணிலோரே.

## ஊர் அமைப்பு வளம்

தேரூர்வீதி தெருளொதிவனப்பின்
நான்கொடிடைத்த, நற்றமிழ்வாணர்,
நல்லிசையோடு நான்மறைபயில்வார்,
நல்வளங்குன்று நாண்மகந்தொடுப்பர்,
ஆரிய மாக்கள் அருங்கலை வாணர்,
வடமொழிப்புலமை வளப்பமாக்கொண்டு
அறுவகை சாத்திரம் சுருதியின் பயின்று
கல்வி கேள்வியின் பல்திறத்தோடு
ஒழுக்கமிரியா விழுப்பத்தமைந்து
மன்னுயிர்க்கெல்லாம் மனத்திடை அன்பும்
முகத்தேயொளிரும் முறுவலொடின்மொழி
மிளிரும் மகிழ்வொடும் மாண்புடன் வதியும்
அந்தணர்முதலா அறத்தொழில் வதிவார்
வேளாண்மையெனும் வகைசாலுரத்தின்
போந்த நல்வினையின் பைம்பயிர் விளைப்போர்
மன்பதையுய்ய மாண்வளம் கூட்டுவோர்
'உண்டிகொடுத்தோர் உயிர்கொடுத்தோரே'
எனுமொழிக்குரித்த ஏற்றமுடைத்தாம்
புவிக்கெழிலாய புண்ணிய அஃகம்

பெரிதுங் கூட்டுவோர் பொருந்தி வாழுநர்;
ஆடகமெறறியே அரும்பணி புரிவார்
இணையவித்தகர் இணைநதிலங்குவரால;
ஏமநாதனை யேங்க வாக்கிய
செவ்விசையாத்த சங்கராபரணர்
மகிழிசை பயிலல் மன்னுமோதுவார்;
கருவிக்கீதம் கருத்துடன் புனைவோர்;
தேவாரமுதல் அருட்பா பலவும்
திருமந்திரமும் திருப்புகழுடனே
மணிவாசகமும் மாண்பொருளிசையுடன்
ஓதிவேதியன் ஒண்கழல்தேடும்
தொண்டர் பலரும் தொண்டு பூண்டுறைவர்;
சைவமோங்கவும் செங்கலையோங்கவும்
புனிதமோங்கவும் புன்பிறக்கிடவும்
மெய்ந்நெறி வளர்ப்ப மொய்ந்நிதியாளும்
மடாதிபதிகள் மகிழ்ந்து நிறுவிய
மாணறநிலைக்கும் மடங்கள் பலவே;
ஆதுலர்க்கடைக்கலம் அடைவொடுபேணும்
அன்னச்சாவடி அனந்தமாயுளவே;
சூழ்தரு பைம்பொன் செழுநெற்புலன்கள்,
மும்மருங்கோடும் மும்மைசால்யாறு,
சிகரமென்ன சீருடைக்கோவில்
இன்னணம் வாய்ந்த இரும்பெருமூதூர்
இணையின்னலங்கள் இயம்பலாமோ!

நாறும்பூநாதர் தொண்டனுக்குச்
செவிசாய்த்த காதை.

கொண்டல் வந்துறை விண்டொடம்வரை
தண்ணருட்கனி உணடபாகத்தன்,
அண்டர் நாயகன் தொண்டர் காவலன்
பண்டு மாலயன் கண்டுகைதொழ
நீண்ட வன்மையை விண்டநாயகன்,

பண்டு செய்தகன் கொடைவிந்தையை
அண்டரும் புகழ் தொண்டு காதையை
நூலைடு மார்வத்தினீண்டு செப்புவாம் :—

## வழுதூர்

பிணிபலபோக்கும் பூம்புனல்யாறு
தாமிரவர்ணியின் தகுவுப நதியாம்
கலக்குமிடத்துக் காவதம் காலின்
கடனையாற்றின் வடகரைவயத்து,
வழுதியின்பேரூர் வளநிறை மணிகள்
கூட்டிய குதிர்கள் கெழுமிய சிற்றூர்
அடைத்த காணியின் அண்மையின் மூதூர்
வழுத்துந்தன்மைய வகைபெறு தலங்கள்
வாவிகூபம் வண்மையின் காவினம்
ஒள்ளிய நீரின் ஒழுகு நீரருவி
மலிநீர்வளமும் நிலவளமும்செறி
பாண்டிநாட்டின் பண்பொடு எழிலும்
செழுவளமும் செழிசீருடை நெல்லை
அம்பெருந்தொகுதியின் அருஞ்சிறுபகுதி
திலகமெனவே திகழுறு சிற்றூர்
வழுதூரெனவே விளங்கிடும் புரியில்,
பண்டு நால்வரும் பாடிய வாரம்

## பக்தியுடைய பண்டாரம்

மன்னுமருட்பா மணிவாசகம் முதல்
பக்தி நூல்கள் பராவிப்போந்து,
சிற்றுயிர்க்குற்ற செவ்விய துணையது,
கன்மவினையைக் கடக்குங்கலமது,
பவ்வமாகும் பிறப்பெனுந்தொல்லைக்
கடல்புறத்தாக்கும் திடமுடை நாவாய்,
பற்றுந்தொன்வினை பிறக்கிடும் அரணி,
ஈரிடத்தின்பம் இருமையின்றருவது,

பரமன்பதமே பற்றுக்கொண்டு
கரணமூன்றும் கருத்தொத்தாகக்
கழலிணையேத்தும் கருமத்தாழ்ந்து
அஞ்செழுத்தோதி அச்சம்விடுத்து
அமலனடைக்கலம் அடைதலல்லால்,
மாயையின்வயத்த பொய்யுடல்புணர்ந்த
பேதைவாழ்வின் கோதெலாமொழியப்
போதமூறு நல்தீதறுமார்க்கம்
பக்தியல்லால் பிறிதொன்றில்லை,
என்னுமெய்யறிவை ஏந்திய மனத்தின்,
பண்டையோர்கால் பண்டாரக்குலப்
பண்பின்மிக்க புனிதனொருவன்,
பற்றியும் பற்றுப்பல்துளியெனவே
இல்லறத்துய்த்தும் இன்றியானெனவே
துறவறம் போர்த்தாருறுவேடமிலா
திகநலமனைத்து மிதந்தே வாழும்
தன்மையனாகித் தகைந்தான்மன்னே!

## பூந்தொழில் பணிவிடை

அரன் மகிழ்ந்தணியும் அதழ்விரிகொன்றை,
மும்மலஞ்சுட்டு மூன்றினையொடுக்கி
மூவர்முதல்வன் முன்னவன் பாதம்
மன்னிப்போற்றுமின் என்னைகுறிக்கும்
மூன்றிலையுடைய மிளிர்தளவில்வம்,
பிச்சி, முல்லை, பைந்தாரரளி,
செங்கழுநீரொடு செம்வெண் முளரி,
நச்சினம்புடைசூழ் நொச்சிக்குழைதழை,
தும்பைச்சிறுவெண் தூமலரோடு,
அருகற்தரித்தாம் அருகன்புல்லும்,
பத்திபத்தியாய்ப் பாத்திகளமைத்து,
புனலுறப்பெய்து பண்பின் வழாஅது,
புரத்தன்மேவிப் பறிகளைபறித்து,

## 1. பூவினம், கா, ஓம்பல் இனையன

கண்ணிறை வனப்பின் காவிறையரும்பினம்
இணருழுத்தாக இணையிலா அலரை,
மாசறுமனத்தின் பாசமறுப்பான்
தண்ணருட்கழலைத் தேனினுமினிய
பாசாமலரால் பணி அகம்பரவ,
தீம்புனல் தோய்த்துத் தீமலம் நீங்கிய
வலச்செங்கரத்தால் வளமுடன் பறித்து,

## 2. ஆரவகை

குச்சுசெண்டொடு ஒச்சுதார் பந்தம்,
கெண்டைவாள்வரிக் கண்ணியாள் மகிழும்
சுட்டிமாலையும் சூழ்தருகிண்கிணி,
அகல்மார்பிலங்க அணியாரம்பல
கட்டியாப்பிட்டும் கடிதில்புனையும்
இடைவிடு வெளியுடை விடுதார்பலவும்,
வேணியோடியையும் விரிந்தொடுங்காரம்,
இண்டைகண்டையாம் பண்டார்பலவும்,
செயற்றிறனறிதாம் வகையுடன்சமைத்து,
நாணலர் மலரின் நீடியதார்பல
அரம்பைவாரின் அழகிதாப்பிணித்து,

## 3. பொதிதல், பக்குவப்படுத்தல்

அழல்நிற அண்ணலை அகநினைப்பூட்டி,
அழகியகுமரன் அத்திமுகத்தோன்
அகங்களிந்தேற்கும் அற்புதத்தெளிவின்
அருஞ்சுவை நீரின் நிறைதருதேங்காய்
பயக்கும் பாதபப் பைன்னிற இலையின்
வேய்ந்த குடலையில் வகையுடன் பொதிந்து,
வாடாக்கற்பின் கோடா நெறியுயர்
வாளெழிற்கண்ணியர் கேளிர்பாற்பூண்ட

தன்னிகரில்லாத் திசழும்பற்றென,
வாடாமலரின் விரையொடு ஒண்மை
குன்றுதாகக் கணம்கணம் காத்து,
பாவாடைபுனை பரமனுக்குகந்த
பாயெழில் மலர்க்குப் பாலாடைபடுத்
திட்டேபதநீர் திடமுடனுறுத்துப்
பண்பின் திரியாப் பகுதியின்பரப்பி
ஒன்றேபற்றினன் ஒண்மையின் புரியும்
தொடையன்மாலைத் திருநலங்கண்டே
வாம்பரியீர்த்திடும் ஆம்பொற்றேரினன்,
‘பண்டாரத்தின் பொன்செயல்புகல்வோம்
அலகிலாவையத் தருநரர்க்கெல்லாம்’
நன்றேயறைவான் நேர்செலும் வெய்யனை,
நாப்பண்ணிடத்தின் நீங்கவிடுத்து,

## 4. ஆலயம் நண்ணல்

சலிப்புறுதொழிலின் சான்ற உயிர்சல
சலிப்பறு கூட்டின் சார்புறுவேளை,
சலிப்புறுவுலகியற் சள்ளையுழன்று
தொல்லைதொலைக்கத் தொழுகையின்வேளை,
மாலைவேளையில் மலர்நிறைக்குடலை
சென்னிமேற்கொண்டு மன்னுவேகத்து
மாண்புறுமனத்தின் மார்க்கம்பின்னிட,
ஆற்றினையணுகியே அரும்புனலாடி,
அருமலர்க்குழுவையும அந்தணபுகுத்தி,
கொழுநன்வருகை கொண்ணினைவினளாம்
பதியின்றேயில் பதநோன்புளத்தள்
ஒளவிழிநொந்து ரொல்லிமைசேர
வீங்கியேங்குற விம்முறுகொங்கையள்
கேளிரைக்கண்டே களியவிழுவகையின்
பொம்மல்விண்டே அமைவுறுதன்மைபோல்,
பக்குவம்பூண்ட பருமலர்க்குழாங்கள்

அடையுந்தலத்து அருமையையுன்னிக்
கூம்பியமொக்குட் டேம்பியவாற்றான்
பொதுமிப்பொருமிப் புலர்ந்தலர்ந்திட்டே
தேவாரண் நண்ணத் தகையுடன்தரித்து,
தொல்வினைமூண்ட செல்கதியதனால்
எழுவதும் மீண்டே படுவதும்பட்றி
அங்காப்புண்டே ஆப்பவிழ்ந்துறழும்
நிலையெனத்தோற்றும் நிலையிலா அகத்தைப்
புனைதருஆகம் பொன்றிவெய்துயிர்த்து
நெட்டுயிர்ப்புற்று நேர்ந்தவோரிடும்பை
கழிமலங்கழியும் கடுவகைநாடி,
கருணைவண்ணனைக் கருத்திற்றாங்கி
வாயலர்மலரப் பாமலர்தொடுத்துப்
பரவிப்பரவிப் போதுறுமளவையின்,
விரிதருமணத்தின் விரிஞ்சன்முதலா
பொருணுகாத பிரணவப்பிழம்பின்
கழலிணைநண்ணி, தழலிடைமெழுகின்
செய்பவமுருக்கும் செம்மனப்பண்பின்,
கடைமுதல்காப்பண் கோடுதற்கியலா
நிருத்தனைமேவும் நறவத்தியைந்து,
பிலிற்றுமலரின் புலமறுமனத்தின்
பைங்கூடைதனில் கைவருநலத்தின்
கொண்டுமேவும் கொள்நெறிக்கண்ணியன்,
அந்தழற்கடவுள் ஆலயம் நண்ண,

## 5. அந்திவந்தனை

அந்திப்போழ்தத்து வந்தனைபயனுற,
தந்திமுகத்தன் தந்தைஎம்பிரான்
பருவரைமகளிர் பாரெலாமுய்க்கும்
அதிபராசக்தி அன்னைகோமதிக்கும்
எழுகாற்பூசை முழுவலன்புடனே
சொற்றிடுங்குருக்கள் பற்றியம்மலரை

பாங்குடனணிவர் பல்கலனூடே
சொற்பதவித்தவர் கற்பதந்தோற்க
ஈரிருமறையும் இயம்புதலாற்றாக்
கரிசினைமாயக்கும் கனல்நிறவண்ணல்,
மெய்ப்பதமுணர்த்த மெய்தொருமுறைவான்.
நாறப்பூதாதனை நற்பண்டாரம்
மெய்யுறமனனுற மொழியுறமன்னி,

## தோத்திரம்

மன்னே! மணியே! பன்னுவர்க்காரணே!
மணியொடு பொன்னும் மண்ணெனவுன்னிய
வாக்வலர்முதலாவகை பெறுநோன்பின்
ஓங்கிய நன்னெறி யோங்கிய அடியார்
எல்லுமெல்லியும் வால்விதினேத்திய
கழலாய்! கழல்புகழ்சனி மொழிபலவும்
ஆற்றுதேங்கிய ஏற்றமுடையாய்!
தொல்வினை தொலைப்பத் தென்றிசைபோந்து
தெண்ணீராடிய விண்ணவர்கோவை
தன்னருளால் தன்புண்ணெலாமாய
விண்ணுலகுய்த்த நற்புண்ணிய! கணணிய!
தஞ்சமெனப்புகல் வஞ்சமிலாவெனை
விஞ்சுநின்னருளின் அஞ்சலென்றழையாய்!
பங்கயற்கண்ணியாள் பிஞ்ஞகனே! சிவ!
பதுமன்விழைந்த பழிவரமீந்தே,
படுதலையஞ்சியே பாரதரூடே
சாலும்பின்னிடக் கடாவுதன்மேயினாய்
கண்டேகின்னிலை விண்டேபரிவுடன்
கண்ணெழில்கொண்டவோர் மென்மைய
ளானான்
முனிவரும் மயங்கும் மேனியுங்கொண்டான்
மாயவித்தகன் ஆய்ந்திடுசோலைத்
துறும்பெருசூழ்ச்சியின் முறுவலின்மொழியின்
கள்ளவிழியின் காட்டினன்கோலம்

ஓவியந்தோற்கும் மோஹினிவண்ணம்
மெய்யினைச்சிதைக்கும் பொய்ம்மையின்தோற்றம்
கூடுந்தெருளின் கூற்றுவற்காக்கி
அறமுறைதெறித்த மறவனையழித்திட,
அருளும்மருளும் அகலாவிகற்பமும்
நின்மனம்பற்றி நயந்துருகிடவே
புன்னகைவிளைக்கும் பொய்யெழிலாள்முன்
பூசலாடவே பித்தனுமானாய்!
கானக்கடவுள் மாவிலங்கினத்தின்
பூதக்குழுவின் தீதறுதலைஞன்
மெய்யன்புடையார் செய்தவநோன்பினைப்
பரிவுடனேற்கும் சவரிமலையான்
மெய்த்துணையாவான் ஐயப்பனெனும்
குமரனைப்பயந்த கோவே காத்தி!
மதியொடுகதிரோன் மங்காமறைவலர்
போற்றுநல்லங்கியும் எற்றுநற்கண்களாய்
ஓர்ந்தேபுரிவினை ஒரமில்தூக்கின்
தண்மையும் வெம்மையும் தகவுடன்பொழியும்
வெண்ணீறணியும் வெண்வரையிறையே!
அருணாசலமெனும் அருண்மலைமேயிய
சோதிக்கனியே! ஊதியமிலையால்
நின்கழலிணையலால்; நேர்வதுமிலையால்
நின்பணியின்றி நாடுமோர் நல்வினை;
பேரெழுத்தஞ்சலால் புகல்வதுமிலையால்;
புங்கவனே! எனைப்புணர்தியோ மெய்யா!
என்றே இறைஞ்சி அன்றன்றுடம்
கடவுண்ணிவேதனம் கட்டியமுதின்
ஒன்றினைப்பெற்றே ஒண்புனற்றுறையில்
உண்டேஅகடும் உள்ளமும் நிறைவுற
சதமில்வாழ்வினை நிசதமுமுய்த்து
நனவும்கனவும் நற்பதமுறவாக்
கொண்டேநிகழ்வான் கொண்டதோர்வெய்ய

## கடுஞ்சோதனை

### 1. கோடைநாள்

சோதனையதனைச் செப்புவாமீண்டே:—
வெங்கதிர்ச்சுடரோன் வெம்மைச்சாற்று
கெழுமணற்காய்ந்து கானலுகுக்க,
நிறைபுனல்யாறு சுவறியொடுங்க,
பல்லுயிர்யாவும் பரிபவங்கொண்டே
துளிக்கும்துடிக்க, கலிவுறுபைங்கூழ்
வாடித்தேயும் வெம்முதுவேனில்
பருவத்தோர்நாள், கருமம்வழுவாப்

### 2. பக்தன் வழக்கம்போல் பணியின்மேவல்

பூப்பண்டாரம், பண்பின்வழாஅத
பண்டைத்தொழிலின் கண்தார்க்கூடை
சிரமிசையேற்றி உறுநெறியுற்றே
தலமதுநாடும் தவமேற்கொண்டு,
உணர்ச்சியச்சா உசவூர்தியெனப்
புலனைந்தெருதைப் பூட்டியேயூர்ந்து
மெய்யறிவாம் கசைகையவே எற்ற
போதமென்றோரான் புகுதலைமேவி,
ஈசன்கழலிணை நேசத்துரஞ்செய,
தன்னைமறந்தே தனியனாய் நடந்து
வழியின் நாப்பண் தழீஇயகாலை,

### 3. கோடைமழை, திடீரெனக் கடத்தற்கியலாப் பெரும்புனல்யாறு

பேரிடியொலிப்ப, காரெலாஞ்சூழ்ந்தே
கருநிறங்குவித்துக் கடுத்துருத்தெதிர்க்க,
வெள்ளொளி எறிந்து கண்ணொளியெரிக்க,

அண்டமும் வெருளும் சண்டமாருதம்,
வல்லெயிற்றவுணர் வாட்படைபடுத்த
எண்ணிலுயிர்க்குழாம் எள்ளுயிர் துறந்தே
தெறிதலைவீழ்ந்தே எறிபடுவுடல்போல்,
நடுங்குறு தருக்குழாம் நிலையிலா திற்று
முறிந்து மிரிந்தும் மூட்டொடுவீழ்ந்தும்
ஆவிக்கஞ்சியே மாவினம் பதைப்ப
சுளித்தும் சுழித்தும் சூறுவளியாய்
அகவேகத்தின் அதிகமாய்ச்சூழ,
சடசடவெனவே தொடர்மழைபொழிய,
வாட்டத்தமைந்த பாட்டைகள்யாவும்
முள்ளும்புதரும் கிளையுஞ்செறிதர,
இந்நிலையுற்றே இன்னலைமீயாரா
திடுக்கணின்மாய்ந்த வழுக்கிலாத்தொண்டன்
உளைந்தனனெனினும் உலைவிலாநெஞ்சத்துத்
தன்னதர்நுகர்ந்து தவிப்பெதிர்த்தேகி
தெட்புனல்யாறு தாமிரவர்ணியின்
குடக்கரை நண்ணினன் குணக்குன்றனையான்
கண்டனன்யாற்றை! விண்டனன்நெஞ்சம்!
மூண்டதுதொல்லை! ஈண்டியதிடும்பை!
கணத்திற்பொழிபுனல் கரையெலாம்படர்ந்து
கடலெனத்திகழ்ந்தே களிதருமொக்குண்
கனைத்தருதிரையுடன் கடத்தற்கியலா
நெறியின்மேவ, நாறும்பூநாதன்
செய்யவாலயம் சேரும்வகையினை
உணராதேங்கினன் கணத்திற்பக்தன்

## பண்டாரம் தடைநீங்க ஈசனையேத்தல்

கோவென்றலறினன் கோபுரநோக்கி!
நிலையின்மேயிய சீர்தருங்கோவே!
நல்லாயினையோ! காண்டிலைதுயரம்!
அன்னையெனும்பெயர் அற்றதோ இற்றே!

அஞ்சலெனவிரை ஆதிமூலமே!
தஞ்சம்புகுந்தேன் தடைதனைமாய்க்க
செவிடாயினையோ! செந்தழல்வண்ண!
மாயைவயத்த வையத்துறைவார்க்
குறுநெறிபுகட்டு முறுகடனுனதால்!
மாமாயினி ஆள்மாசக்தியுமை
பாகம்பறித்தொரு ஆகமும்கவர்ந்தனள்!
அஃதிலையாயின் அகங்கசிந்துருகும்
நாயேன்புன்மொழி நாடிலைஎன்னே!

## 1. சிறுத்தொண்டர் புராணம்.

பச்சிளங்குழவியை நச்சினையுண்ண;
சறியுஞ்சமைத்தனள் கற்புடைமடவாள்;
மைந்தரிலாவில் மாண்புடைத்தாகா
விருந்துண்சையினும் வெறுமையினேகல்
நன்றெனஉருத்தே நின்றநின்னிலையைக்
கண்டேயஞ்சிய கயற்சணிவிதிர்த்தாள்;
'அருளுடன்பயந்த ஒருமசவொழ்த்தேன்;
உடனுணமறுமக விடுவதுயாங்ஙனம்?
புரிவதொன்றேரேன், பேதையளந்தோ!'
என்றேகலங்கினள் கன்றுமுளத்தளாய்;
ஐயனேயாண்டை நீயையிற்காட்டிய
கருணையின்பெரிமை கழறவும்படுமோ?
சீராளா! உறும்பேறுளா! என்னே
அழைத்திடுவாயே. ஆயிழைமகளே;
என்றாய்பசுபதி, கன்றினைக்காண
அவாவுறுவாபோல் மேயினள்வெளியே;
அங்ஙனம் கூயினள் அகம்நடுக்குறவே;
துள்ளிக்களித்துத் தீம்புனல்துளியெனத்
தூயபாலனும் பயந்தேஇல்லம்
அணைந்தானன்னை மனமகிழுறவே
வள்ளால்! மறைந்தே வெள்ளெருதேறி

விண்கண்தோன்றிக் கணிமையெனக்
கனவறங்காத்த கடுந்தவத்தவர்க்குப்
பொற்பதமீந்தனை பொன்னம்பலனே!
என்கணுமீண்டு ஏந்தருளிலையோ?

## 2. கண்ணப்ப நாயனார்

வாய்கொள்வெள்ளம் பார்சடையிட்டு
முடிமிசைமலர்நின் மிடிமிசையுதிர்த்தி
அருருசிகொள்புல்லால் அன்புடன்படைத்துச்
செருப்புக்காலால் செங்கண்குறித்துக்
கூரியகணையின் கருவிழிநயனம்
பறித்தே பக்தியின் பெருமிதங்காட்டிய
திண்ணனுக்குகந்து திகழிசைவீடு
நல்கியவெளமா! நனிஎனைநோக்குதி!
பல்லூழியன்கொள் பிறவிப்பவங்கள்
உருவாயமைந்து உறுவழிமடுக்கும்
வெள்ளமதாகி வெம்மைபயந்ததோ!
என்னோஅறியேன்! ஏங்குதலல்லால்
தயக்கந்தவிர்ந்திலேன் தன்புணற்சடையாய்!

## 3. ஞானசம்பந்தர்

தண்ணந்தனியே தாமரைவாவியின்
கரைமிசைகரைந்த அருந்தவமதலை
அம்மையே! அப்பா! வென்றலறினவொலியுற
குழைபகத்தன்னை கரைதற்காற்றுது
பாலனையணைத்தே பாலூட்டினளால்;
ஞான நீரதை ஞேபத்துண்டதோர்
சேயுஞ் செவ்விதாஞ் செம்பணும் பாட
அப்ப! நீயறிந்தே ஒப்புசெய்தாளம்
ஆடகத்தமைந்ததை அடைவுடனீந்தாய்!
பண்ணுநற் புண்ணியத்திண்மைவாய் தொண்டன்
தெள்ளமுதொழுகும் தேன் கவியலர்ந்தனன்;

அருளெனு மொளியின் அணுவளவேனும்
கண்ணுறுமாறே கண்ணீர் மல்கி
வருந்து மேழையற்குறு வழிபுகன்றே
காத்திடுங் கருத்து கண்டிலைகொல்லோ !

## தோண்டர் கையால் புடைப்புண்டது.

வில்லெடுத்தெற்றிய விசய வீரனை
கல்லெடுத்தெற்றிய கடுந்தவ நோன்பனை
செருப்பெடுத்தெற்றிய வருத்திடு வேடனை
கழியெடுத்தெற்றிய கண்ணகரிறைவனை

நாவெடுத்தெற்றியே நேர்ந்ததோர் ‘பித்தா’
எனவசை கழறிய எழில்மண வேந்தலை,
குற்றமோர்ந்திட்டோ கூடிக்குலாவினை !
பறைதற்குற்றவோர் குறை யென்னுற்றினும்
அருள் வெள்ளங்கொண்டே யவித்தெனை
யாள்வாய் !

கண்ணுண்மணியே ! கருத்து நினையலால்
கருதும்பொருளும் வேறிலேன் கோடி !
மெய்நாசோரவும் மென்மலர் வாடவும்
மெய்விதிர்ப்புறவும் மெய்யனை வாட்டுதல்
பணுவுசிராமோ ! மன்னு சீரடியாய் !

காவாயாகிலென் காயமே கொள்தி !
புனலெடுத்தேகப் புகுவேன் சதமே !
பழிதவிர்த்திடவே பார்த்தருள் புரவல !
என்றே யேத்தியும் என்புருகிடவே
நொந்தே கதறிடும் நேர்மையன்மொழி சென்

றம்பலவாணன் எம்பிரான் செவியுற
கண்ணுதற்கோ வுங்கணமதில் பரிந்தே

## நாறும் பூ நாதர் தலைசாய்த்தருளல்
## அசரீரி வாக்கு

'மதலாய்! அழுங்கலை, தீதிலோய் வாழி!
நந்திறலோதுவார்க் கின்னலு முறுபவோ?
சைவச்செழும் பயிர் செம்மையின் விளைத்த
மெய்ந்நெறிமேலவர் மையறு பண்ணினும்
இனிமையாக்கொண்டோம் நின்னரு மொழிகள்!
அயர்வுறலொழிக! அழுந்துதல் புனலிடை
தவிர்ந்தேயோங்குக! தகுநெறிவழா அத்
தகையொடுவாழ்வினைத் தாங்கிய நினக்கும்
உளதோ வெங்குறை? ஊறகற்றிடுவோம்;
பேதுறலெனவே பேருடல் சாய்த்து,
செவிகொடுத்தருளி செய்யருள் வள்ளல்
திகழ்வினைத்தொண்டனைத் தேற்றினன் மிகவே!

## ஆற்றினூடே வழி

உருக்கரந்தோதிய உருகுமெய் வசனம்
அன்றாழ்கடலிடை அவுணர் புத்தேளிர்
வாசுகிநாணு வரையு மத்தாக
அலைந்தகாலை திளைத்தவோ ரமுது
வல்லெயிற்றரக்கர் வசையொடு மறத்தின்
செறிதீ நெஞ்சத்து செருவினடர்த்த
தொல்லை யாவையும் தோலுறச்செய்தே
உம்பராதியரை உய்பு மாறாக்கி
ஏனையோர் மாளும் எஃகுமாயதுபோல்,
தொண்டன் விழைநெறிதடை செய்யாற்றின்
ஈர்ந்தே அகட்டை இருவழியுணர்த்தும்
கூறுசெய் வாளாய்க்குன்றின் குணத்த
அன்பர்க்குத்திறம் அறைதலுமேயதால்
போந்தபிளவின் பேர்வழி கண்டனன்

## பக்தன் போற்றுரை

பேறினியுண்டோ பெற்றேன் பொன்னருள்
ஈசா என்மனநேசா உன்றன்
மாண்பினை நுகர்ந்தேன் ; மன்னு மறைக்குழாம்
மாதவர், வணங்கியோர், மாக்கழல் துணையென
மன்னினர், நின்குணம் கண்ணெனக்கொண்டே
மன்குணமுடைமையாய் மீக்கறங் கொண்டோர்,
இன்னோர் தமக்கு நீ இறையலை அடியனும்,
என்றே நுகர்ந்த ஏதமில் பண்பொருள்
இன்றே கண்டனன் இணையிலாத்தரத்து
ஏழையேன் என்றன் மழமொழியுண்டோ
நாயேன் நலமுற நவின்றனை அபயம்
கரையிலாக்கல்வி கற்றிலேன் சிறிதும்,
ஏதுந்தெரிகிலேன் ஓதுதற் பாலது,
துரும்பனேனைத் தகு பொருளாக்கி
தொண்டர் குழாத்தில் தகுதலமீந்தாய் !
கண்ணகல் வானவர் கடுந்துயர் தீர்க்கவே
ஒப்பிலாமணியாம் சுப்ரனைப் பயந்தோய் !
தன்னேரில்லாத் தனிப்பெரு மூர்த்தி !
அம்பாலார்த்தனே ! அடியனென்றனையே
அருணோக்கமெனு மமுத வெள்ளத்து
ஆட்டிக்கொண்டாய் ஆபதந் தீர்த்தாய் !
பிழைகளத்தனையும் பொறுப்பா யின்றே !
விலங்கேயனையன் புலமை யணுவிலன்
வெறுமையாளனைப் பெருமிதங் கொண்டு
பேருறவுடனே பேறுறச் செய்தாய் !

## ஆவி நீத்து ஐயன் பாதம் நண்ண விழைதல்

அம்மை முதலா ஐங்குரவரும் நீ !
அருமைந்தெழுத்தே அருமருந் தாகும் ;
செய்ய பூங்கழல் மெய்யரணாகும் ;

இந்நாள்வரையும் இயற்றிய தொண்டின்
பொருளும் பயனும் மருளறக்கண்டேன்;
புல்லறிவுடையேன் புரிபணி சிறிதே;
திருவருளளவோ பெரிது பெரிது;
கன்றின் குரலுக் காற்றாது விரை
தாயென விரைந்த நின் தயைதானென்னே!
அன்பெனுஞ் சிறையாம் இன்பநிலையமாம்
எழில்பெறு பிணிப்புள் ஏற்றினை! ஏற்றினை!
அண்ணலே! இன்னே நண்ணினேன்
பொற்பதம்;
மண்மிசை தரியேன் மருவுபற்றில்லேன்,
அடைக்கலம் புகுந்தேன் ஆருயிர் கொள்தீ!

## இடபவாகனன் திருவுருக்காட்டல்

என்ன நவின்றே ஏங்கு நல்லமையத்து
அண்டம் புரக்கும் தொண்டர் காவலன்
விடையமர்ந்தவனாய் புடையாளோடும்
ஐங்கரன் குமரன் பங்கமில் சேமத்
திறலுடை நந்தி திருமாலயனுடன்
கணம்பல சூழக்கணத்தினில் தோன்றி,
அன்பர்க்கெளியனாய் அன்பனும் பூம்பணி
மேவியதூயன் முன்னிலையெய்தி

## ஈசன் கட்டளை

'அப்பனே! வியந்தேன் ஆருயிர் தரிப்பாய்,
பூமிசை சிலகால் பொலங்கொளிப்பணியை
பூண்டே திகழ்ந்து தொண்டர்தலைவனாய்
மீக்கொள் பெருமையின் மிளிரப்பெறுவாய்!
ஓதாதுணர்ந்தே ஓது வயாவும்
ஓதுவை உகந்தே எமக்குகந்தவையே!

கோணற்சாமி

நின்குறை கேட்பவே நேர்மை கோடியே
சாய்ந்த எம் சாய்வு சாலவும் பொருந்தி
ஊழியுள்ளளவும் உரமுடனிருந்தே
பல்லோரறியவும் பக்தர்க் கெளியேம்
'யாம்' எனுமுணர்வு யாண்டு மோங்கவும்
நின்பெருஞ் சீர்த்தி நாளெலாம் பரவவும்
இலங்குவதாக! எம்மனங் கவர்ந்தோய்!

## முயல் மதியின்கண் விளங்கும் காதை

ஐம்புலனொழிய மறனொரறிவிலாப்
புன்றொழில் பிராணி மென்முயலோர் நாள்
தன்னேரில்லாத் தியாகந் துணிந்து
சீடர்குழாங்கள் செறிவன மாவினம்
யாவும் பேர்பெற யாக்கையெரியுறத்
தீ முணவாகவே தீயிற்பாய்ந்து
எம்பசி தீர்க்கவே ஏமாப்புடைத்தாய்
ஆவிநீத்திட்டே மேவுநற்புகழின்
பாரெலாமொளி செய் காரியை நீரின்
தண்மதி காப்பண் விண்ணினிலங்குறு
தன்மை மானவே, தனக்கென்றிலாத
தருபணிகொண்டு தூய்தொழில் புரந்து
மெலிவும் நலிவும் மேன்மையாக்கொண்டு
நாளுநடந்தே நீடிய கான்வழி
மெல்லடிநோவவும் மெய்த்திறம் சோரவும்
ஊனக்கண்கள் ஊன முறவே
எல்லுமெல்லியும் மென்மலர் பறிக்கவும்
அடர்ந்த பூக்களை யாரமாய்ப்பிணிக்கவும்
சிரம்நெறியுறவும் சீரிய நோன்பெனக்
கொண்டு கூடையில் கோயிலகத்தே
எம்மணிக்காகவே ஏந்துதுயர்பல

கண்டே வியந்தேன் திண்டோளுடையாய்!
புற்றெலாமறுத்துப் பற்றறு எம்பதம்
சரணென நாடியே சடலமொசித்து
ஆருயிரளித்தலே யருமையாங் கடனாய்
உன்னினை! உன்னின் ஓங்கிய கருமத்து
மேம்படும் தொண்டரும் மேதினியுளரோ?
பற்றின் மிஞ்சிய பெருமிதச்செல்வா!
வாழிசிலகால் வழிபடு மாக்கள்
வழியுணர்ந்துன்நெறி தழுவியே யார்ப்ப,
ஈரிடத்திசையும் இருமையின் கொள்தி!

## அலகிலா விளையாட்டுடையார்

என்றென்றிசைத்தனன் ஏவலினளித்தலும்
காத்தலுமழித்தலும் கடைக்கால் முடிவில்
போகட்டிடத்து; பாரெலாம் சுமத்தலும்
அலகிலாக்களியின் அயர்விலாதியற்றுவான்;

## பொன்னம்பலவர்

ஆட்டுவித்தனைத் துயிர் ஆடலானந்தம்
அருந்தவத்தலத்தின் அவைதனில்
சொல்வான்;
தாருகவனத்துத் தருக்கிகள் செருக்கினைச்
செகுத்தே உழுவையின் தொக்கினையுடுத்து
கஞ்சுகமாகவே கரித்தோல் போர்த்து
மான் மழுவேந்திய கணனுமிழ்க்கண்ணினன்;

## திருநெல்வேலி 'நெல்லையப்பர்' பால்பக்தன் வரலாறு.

அணணிய கோவிலின் நண்ணிய பிரார்க்கு
கொள்ளபிஷேகக் குறிப்பின் வேளை
தவறு தெய்தவே தகையுடன் சுமந்தே
வேணுவனத்திடை நாளும் கடும் வழி

கடந்தே பாற்குடம் கொடுசெல்பவனாய்
தொலையாக்கருமத்தலையுமோர் தொண்டன்
வஞ்சகமில்லா வனப்புறுவாய்மையின்
நாளுங்கடனை நடாத்துங்காலை
உயரநாமம் உறுதுணையாகக்
கொண்டே உய்தொழில் மூண்ட அவ்வடிமைக்
கருள் செயுங்காலம் அருமையினுள்ளி,
அன்பன் காலினை அதரிடை அடர்த்தே
அரியபாலனைத்தும் அருஞ்சடைக்காக்க,
உள்ளதுணரா வெள்ளியன் வாள்கொடு
தருவின் வேரெனக் கருதிய வாற்றான்
போழ்ந்தே யீர்த்திடச் செழும் புனல்யாறாக்
குருதியோடக் கரைந்தனனாகிக்
சண்ணுறுங்காலை கண்ணுதற்கடவுளின்
லிங்கவடிவாம் பங்கமிற்சிலையைக்
காணா அபர்வின் கண் கலங்கிடவே
சோவென்றலரியே சோகமுற்றிடவே,
அணைத்தேயேழையை 'அன்ப'; வென்றழைத்தே
கோதறு குணத்தின் கொள்சருமத்தின்
கொண்டோம் மகிழ்ச்சி; கொன்றைவேய் சடையின்
உண்டோம் பாலெலாம்; விண்டாய் பவங்கள்;
தாயே குறியெனத் தயங்கு மனத்தின்
சன்றேயாமென ஒன்றே குறியாய்
எம்திருநாமம் இலங்கு நல்லகத்தாய்!
ஈடெடுப்பில்லா இருமையின் வாய்ந்த
நின் மனப்பாங்கின் நலம் மிக வியந்தோம்
ஆநிரைப்படலத்து ஆந்தொழில் நடாத்திப்
பொய்கை பொய்கையாப் பால்மிகப் பயந்து
பல்லோர்க்குதவியும் பணிபல புரிந்தும்
நன்னெறி வாய்ந்து நாவலம் படைத்துப்
பாப்பரிமாறிப் புகழுடன் சிலகால்
ஈண்டுவாழ்ந்தே ஆண்டென் புடைசூழ்

மாதவர் குழுவில் மாண்புடனமர்வாய் !
என்றேயருளிய மன்றுளன் பரமன்
தொல்லை மாய்த்தருள் நெல்லையம் பலத்தான்

## பண்டாரம் வாழ்வினை நடாத்திப் பரமன்அடி கலத்தல்

பிறையணிப் பெம்மான் அறைந்த விம்மாற்றம்
செவியுண்மாந்தி சேவடிபற்றிய
செம்மனத்தினனாய்ச் செயலும் மனனும்
உரையும் வரைமகள் உமைபதிக் கீந்து,
இறும் பூதெய்தி, இருவிழியலரும்

## அரன்உருக்கண்ட பக்தன் நிலை

கண்ணீர் மல்கி, தெண்ணீர் கயமென
நிறைவுறு களிப்பின் நின்றனன் தொண்டன்
அலர்தொரு நறவை அருந்திய அளியது
தன்னைமறந்தே திளைத்திருப்பது போல்
ஓதுமைந்தெழுத்தா மொள்ளியவமுதம்
சித்தந்தோய்த்திடச் சிறப்புறு சிலையென
மேவிய மெய்யன் மெய்மறந்தனனால் ;
கணத்துறு பொழுதின் கண்திறந்திடலும்
கண்டனனில்லை கண்மூன் றுடையனை ;
கண்ணருள் வியந்தனன் கண்ணியனார்த்தனன் ;
கோணற் கடவுளின் மாண்பெருசிறப்பை
ஓதி ஓதி ஓதியே மகிழ்ந்தான்,
நாறும் பூநாதன் நலலோர்க்கருணைய்
நலன் செயும் வகையை நாளும் போற்றினன்,

## உயர்நெறி வாழ்வு

உடையார் வகுத்த உண்மை கடவாது,
உயர் நெறி வாழ்ந்து, ஊரெலாம் புகழ்ந்தே
வழிக்கொளுந்தரத்து வாணாடாத்தி,

குலநலம் புரந்து, குணநலம் விரித்து,
குழுமியோர்க்கறவுறை கோதறவுணர்த்தி,
'வையத்தின்னணம் வாழுமினெ'னவே
சான்றாண்மையுடன் சான்றாய்ப்பொலிந்து,
கடுமழை பனியிலும் கொடுங்கோடையிலும்
கணமும் தரியாது, கோணனை வணங்க
வழுதூர் விடுத்து மருதூரணைந்து,
நனவும் கனவும் நற்புனற்சடையான்
நினைவே நினைவா நாளும் நண்ணியே,
கருமம் தொலைக்கும் கனகன் தாளிணை
அல்லும் பொழுதும் அண்மையினுக,

## அடிசேர்தல்

சாலவித்தையான் சூத்திரப் பாவைபோல்
மாயவவனியில் மாயத்தியல் வாழ்
மெய்யினை யறிந்து மெய்யுயிரோடு
சோதிப்பிழம்பின் சேவடியுறழ்ந்தனன்

## லிங்கத்தின் கோணல் இயல்பு

புடை மருதூராள் புடார்ஜுனத்தேவின்
பெருமையை யோர்ந்தே பராவரும் பனுவலர்
நாறும் பூ நாதரின் பூர்வீகமீதாப்
புனிதர் பகர்வரிப் புண்ணியக் காதையை
கோணற் கடவுளின் கோணிய சிலையதை
நிமிர்க்க வுன்னிய நூல்வலர் பல்லோர்
தந்திரிகள் சூழ்முறை மந்திரம் பலவும்
பலித்தலின்றியே, பகர்தரமில்லாப்
பரமன் பெருமையும் புரியருட்டிறனையும்
எடுத்துக்காட்டின எல்லிருமுணரவே

## சான்றுகள்

இந்திரன் சிலையும் இயலெழிலுற்ற
வேளையில் சான்றாய் விளங்கிய குடமுனி
அத்தனுக்குகந்த வித்தகன் சிலையும்
தூயறம் வகுத்தே பூந்தொழில் மேவிய
புண்ணியன் சிலையும் சண்ணுறக் காணலாம்
வடபால் குணபால் தக்கணம் சூழ்நதி
குறையறுத்திட்டே குன்றாவளத்தின்
கடனசிற்றாற்றினை யகட்டினிலேந்தியே
முழுகுவோர் பவங்கள் மாழ்கிட வாக்கியே
ஒடுங்குமனத்தினா கடுந்தவம் புரக்கும்
தூய்துறை பலவும் சூழ்தர ஓடும்
திண்ணமாயமைந்த வண்ணமுங் காணலாம்

## இந்திரனுக்கு விருத்திர ஹத்தி தோஷம் நீங்கப்பெற்றது

மெய்த்திறனலைக்கக் கைதவ மாண்டே
ஒப்பிலா மாயத்து எப்பவும் தேர்ந்த
போர்த்துறையாளர் பொங்கும சீற்றத்
தாக்கர் குழுவின் தலையான் விருத்திரன்
நேர்மை யோராப் புன்னெறிவயத்தன்
கதித்தே எழுந்து கொடுமை விளைப்பான்
உப்பரை எதிர்த்தே ஊழித்தீபோல்
உரமொடு கலக்க உவகையர் கோமான்
விண்டனன் பொறுமை, வீரமொடெழுந்தான்
காராய்க்கரந்தும் நீராய்த்திரிந்தும்
வண்புகையாகியே கண்மறை சால
மாயப்போர்பல முன்னியே அடர்த்த
வல்நிசாசரன் விருத்தனை மாய்க்க
வச்சிரமெடுத்தான் வள்ளலை நினைந்தான்;
வேள்வித் தலையான் வெண்டிரை சூடி

தூக்கிய காலின் துன்பந்துடைக்கவே
தில்லைத் தலத்து திகழ்மறை முடியான்
கழல் நினைந்திட்டே கடுகியே நீத்தான்
வல்லெயிற்றரக்கன் வன்மை குலைந்து
மெய்யுயிர் நீத்தே மாய்ந்தனன் மெய்யா
மறைக்குலத்துதித்த மாயவன் இன்னுயிர்
பருகிய பவமது பற்றிய மகவான்
உருத்திரனாணையின் உறுபவந்தொலைப்பான்
சருத்தினிருத்திக் கருமவயத்துச்
சூறாவளிபடு சிறுதுரும்பெனவே
நலிவுறு சிந்தையின் நாடுநலத்துப்
பன்னகன் பரமன் புடார்ஜுனபதியை
அடுத்தே அகல்வினை அருளினைப் பெறவே
கடிதினின் உற்றே காசினிக்கண்ணும்
புடைமருதூர்பால் பராவுறு சிந்தையின்
மேவினன் மகபதி மாண்சிறப்புடனே;
அன்னாய்! ஐயனே! ஆர் உறவேஎன்
ஆபதம் தவிர்க்கும் ஆற்றலுடையோய்!
அரனே, அருமறை ஆர்க்கும் நல்கோவே,
இறையே, பொறையே, இமையவர்க்குரமே,
இமவான் செல்வியை இடப்புறத்தணைத்தோய்,
அடியவர் இடுக்கண் அணுவும் பொறாதாய்,
அடியேன் நோதல் அழகோ! அழகோ!
கருணை வடிவே கார்த்திகை வீரனைக்
கரிய வஞ்சரின் காலனாய்ப் படைத்தோய்,
(என்) பவமெறித்தாள்வது பாரமோ ஐயா!
எனவே அரற்றிய ஏழைசொல் மடுத்தே
ஏறுடையான் அவன் ஏற்புடைத்தவனாய்
நன்னாட்டவன் முன் நேர்ந்தே இசைத்தான்,
அஞ்சேல், அஞ்சேல், அறத்தவர் பதியே!
மறத்திடை மேவியே மாபாதகம் புரி
விருத்தனை மாய்த்தது அறத்தின் பாலதே,

பீடையும் பாவமும் பயமு மொழித்தாங்கு
புண்ணியம் பயந்தோய்! பவக்லேச மெனே!
பிரமனும் அஞ்சிய புல்லனை வதைத்தபின்
பிரம்மஹத்தியென்? விருத்ரஹத்தியென்?
விண்ணவனே மனம் வீணில் நோகேல்,
அகமகிழ்ந்தாட்கொள மிருந்தோம் பரிவுடன்,
அன்பனே அகலா அருள்நலம் பெறுவாய்,
அன்பினோர் போற்றும் அறப்புகழ் பெற்றாய்,
அழகின் பொலிந்தாய் அஞ்சுவதென்னே!
என்றே அருளினன் ஏந்தா நற்சுடரோன்
(அங்ஙனம்) பரிவு காட்டிய புடார் ஜுனன்புரமாம்
பேர்கமழ் பூங்கா புடைமருதூரே!

## ஸரஸ்வதி, லக்ஷ்மி, பூதேவி மூவரும் பூஜித்த ஸன்னிதானம்.

ஆர்தவச்செல்வியை அரிணத்தணங்கை
பத்மத்துதித்த பார்வதிதேவியை
பருப்பதத்திறையோன் பக்திக்குறையை
பக்தர் பங்கினை பாடுனர்க்கிலக்கை
அன்னையை அன்பை அறஸ்வரூபியை
அம்மை கோமதியை அன்பினணித்தே,
கற்பகக்கொழுந்தின் கனக பீடத்து,
அறங்களுப்பவும் அறைநலம் பல்கவும்
அவனி உய்யவும் ஆர்கலை உய்யவும்
அருமலர் கொண்டே அருச்சனை மேவி
வாணியும் திருவும் வாழிபூதேவியும்
வந்தனம் செய்தவோர் வகை புகழ்தலமே'

## மனுவுக்கு பிரஸன்னராய் அருளியது.

முறை நூல் வகுக்க முன்னிய மனுவும்,
திறமுடன் சாற்றும் தகுநூல் தரணியில்

தடம்பெற்றோங்கித் திண்மை திகழ்ந்து
தலைமுறைதத்வமாய் தலையெடுத்தோங்கி
வளர்புகழ் சுருதியின் வண்நிதியாகவே,
அறநூல வகுக்க ஆரறிவுறவே,
உணர்வொடு ஊக்கம் உரமருள் பெறவே,
புடார் ஜுனபதியின் பேரருள் வாய்க்க,
பரமனைவாழ்த்திப் பரிவுடன் வேண்ட,
பினாகி அன்பொடு பிரஸன்னனாகி,
பாலனை அணைத்தே பாலித்தறமுறை
தொகுத்த நீவாழ்வாய்! தோலாநாவின்
உரைத்தநின் மொழிகள் ஊழிக்காலம்
உரத்தொடு நிலவும்! உத்தமனே வாழ்!
எனவே அருளிய ஏற்றம் மிளிர்ந்த
வரதன் காக்கும் ஊர் புடை மருதூரே!

## பிரம்மதண்டம் தலப்பெருமை உணர்த்தியது.

இமையவரையின் இழிந்தே கின்பத்
தெள்ளமுதின் புகழ் தெண்ணீர்ப்பரப்பின்,
திருமகன் பிறந்த தொல்சிறப்பமைந்த
அயோத்தி காசி அரிய வங்காளம்,
அம்மை காளியாள் அமர்ந்துறைகட்டம்,
முதலாத்தேயம் மாண்புறப்பாய்ந்து
நிலவளம் புரக்கும் நீர்வளம் மலிந்த
மந்தாகினியாம் மாபெருநதியாம்
கங்கையிலிட்டவோர் கமழ்மலரோனின்
கணக்கிலுயிர்கள் கருத்தின்படைப்போன்
பிரம்மதண்டமது பாரெலாங்கடந்து
பரந்தகடலிடை பரக்கவே மிதந்து
ஆடிப்பாடி அருங்கடல் திரையின்
அகத்திடை உய்த்தே ஆழிகடந்து
தாமிரவர்ணியாம் திகழ்நதிசலக்கும்
கடலிடை மன்னி, கண்ணுக்கினியவாய்

சருத்துக்கினியவாய் கண்ணகல்ஞானக்
கொழுந்தினர் இமையரும் காணவே முன்னி,
தாமிரை யோட்டம் தகர்த்தெதிர்ந்திட்டே,
மூள்வேகத்துடன் முன்னியே ஏகி,
புடைமருதூரெதிர் பாங்குடன் நிறப,
தூலவர் மேலவர் நாண்மலர் பொழிய,
தலப்பெருமையுனி தாழ்சடைக்கடவுள்
புடார்ஜுனேசனின் பதப்பெருமையுனி,
தோத்திரம் செய்தவோர் தொல்புகழ் பதியே!

## மூர்த்தி தலம் தீர்த்தமுப்பெருமை தக்ஷிணகாசி

மூதுரைக்கிலக்காய் முதுமையின் சான்ற
மூர்த்திதலம் தீர்த்தம் முப்பெருமையுடை
தாம்ரவர்ணி தனிவலக்கரையில்
பாங்காயமைந்த படிக்கட்டின் உயர்
எழில்மதில் சூழ்ந்த ஏற்றத்தலத்தில்
செய்மையினின்றும் செழுங்காக்ஷியருள்
சேயனைப்பயந்த செந்தீக்கண்ணன்
அருளுடைநாதன் அம்பலத்தவனின்
ஆலயச்சிறப்பின் அழகுதான் என்னே!
முப்பெருங்காசியின் முதன்மைத்தாயதும்
தென்கைலாயமெனுஞ் சால்புடைத்ததுவும்
பொருளும் பயனும் புனிதம் பயப்பதும்
இயல்வளம் யாவும் இலங்கி நிற்பதும்
இருமையர்க்குறவுசெய் இங்கிதம்யாவும்
கூடியமூதூர் புடை மருதூரே.

சுபம்.

கோமதி புடார்ஜுனே சுவரர் ஸஹாயம்

## மங்களம்

புகலுறு புண்ணியந்திகழுறு தலங்கள்
பலவினுட் சிறந்த புடை மருதூரின்
புரக்குந்தேவாம் புடார் ஜுனன் மகிமை
கூறுவோர் கேட்போர்க்குறும் பெரு வாழ்வே

உ

ஆசிரியர் திரு. நா. பிச்சுமணி. இயற்றிவரும் **'அன்பு வெளியீடு'** நூல்களின் **விபரம்**:—

| | | | |
|---|---|---|---|
| 1. | அன்புவெளியீடு | அலர் 1. | செர்தூரகவல்<br>வெங்கடேச அகவல்<br>பாராசக்தி 'முப்பத்து' |
| 2. | ,, | அலர் 2. | 'தமரப்பத்து'<br>ஷை இரண்டாம் பதிப்பு (சில கீர்த்தனங்கள் உள்பட) |
| 3. | ,, | அலர் 3. | 'முருகன் அக்ஷரமாலே' |
| 4. | ,, | அலர் 4. | 'சரணபத்ததி' |
| 5. | ,, | அலர் 5. | 'பாராசக்தி கீதம்' |
| 6. | ,, | அலர் 6. | திருப்புடைமருதூர் தலச்சிறப்பு |

---